# ாரதியார



# குயிற் பாட்டு



கழக வெளியீடு

கழக வெளியீடு: ௧௨௨௩

தேசியகவி, சி சுப்பிரமணிய பாரதியார்

பாடிய

# குயிற் பாட்டு



குறிப்புரை :

திருக்குறள்மணி, வித்துவான், செஞ்சொற்புலவர்

திரு அ க நவநீதகிருட்டிணன்



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி - 6. சென்னை - 1.

1965

அங்கப்ப பிள்ளை நவநீதகிருட்டிணன் (1921)

 1965 THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LIMITED.

Ed 1 July 1965



KUYIR PAATTU

Appar Achakam, Madras - 1.

# பதிப்புரை

தெய்வீகக் கவிஞர் பெருமான் திருத்தகு சுப்பிரமணிய பாரதியாரின் பாடல் என்றாலே உள்ளத்தில் ஒரு புத்துணர்ச்சி பொங்கி எழும். வெண் சொல்லும், நுண்பொருளும் அமைந்து கற்போர் கேட்போர் அனைவரையும் ஒருங்கே பிணிக்கும் மாண்பு மிக்கது; கற்றோர்க்கும், கல்லாதார்க்கும் ஒரு புத்தமுதாய் ஒன்பான் சுவையும் ஊறிப் பெருகுவதாய் அமைந்துளது. தொட்டனைத் தூறும் மணற்கேணி போலக் கற்குந் தொறும் புதிய புதிய கருத்துக்களைத் தோற்றுவித்து அறிவை வளர்க்கும் இயல்பு வாய்ந்தது. அழிவின்றி உலகில் நிலைத்து நிற்கும் பெருமை மிக்கது.

தெய்வீகத் தன்மை வாய்ந்த இயற்கைக் கவிஞர் பெருமானாகிய பாரதியார் பாடியருளிய பாடல்களுள் குயிற் பாட்டும் ஒன்று. அது கற்பனைக் கவியாகவே இருப்பினும், உண்மையாகவே நிகழ்ந்த கதைபோன்று காட்சியளிக்கின்றது. அகப்பொருட்டுறைகளும், புறப்பொருட்டுறைகளும் விரவி வரப் பாடியிருப்பது வியந்து பாராட்டுதற்குரியது. வேதாந்தப் பொருளையே காதற் களஞ்சியமாக அமைத்துப் பாடியுள்ளது கவிஞர் பெருமானுக்கு வேதாந்த நூல்களிலும் மிக்க பயிற்சி உண்டு என்பதைக்

காட்டுகின்றது. இக்குயிற் பாட்டின் அருமை பெருமைகளை முகவுரையிற் காண்க.

வித்துவான் முதல்நிலை வகுப்புத் தேர்வினுக்குரிய இலக்கிய நூல்களுள் ஒன்றாக இதனையும் சென்னைப் பல்கலைக் கழகத்தார் சேர்த்துக் கொண்டிருப்பதனாலும் இதன் சீரிய மாண்பு நன்கு விளங்கும்.

இவ்வினிய குயிற் பாட்டிற்குத் திரு. நவநீத கிருட்டிணனவர்கள் அரிய, இனிய குறிப்புரையும், நூலின் சாரமே என்று போற்றத் தகும் முன்னுரையும் எழுதி உதவியுள்ளார்கள். அவர்களுக்கு எங்கள் உளமார்ந்த நன்றி என்றும் உரியதாகும்.

இந்நூலும் குறிப்புரையும் என்றும் நின்று நாட்டு மக்களுக்கு நலம் பயக்கவேண்டும் என்னும் விருப்பத்தால் நாங்கள் இதனைப் பதிப்பித்து வெளியிடலானோம். இந்நூலை மாணவர்களும், ஆசிரியர்களும் மற்றவர்களும் வாங்கிப் பயின்று பயன் பெறுவார்களாக.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# உள்ளுறை

# முன்னுரை

'பாட்டுக்கொரு புலவன்' என்று கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையாற் பாராட்டப்பெற்ற கவிஞர் பாரதியார் தம வாழ்நாளில் ஒரு பகுதியைப் புதுச்சேரியிற் கழித்தார். அந்நாளில் அவர் தமிழ் உலகிற்கு ஆக்கியுதவிய அருங் கவிதைகள் பல. அவற்றுள்ளே ஒன்றுதான் 'குயிற் பாட்டு' என்னும் இனிய கவியோவியம். இச்சிறு நூல் எழுநூற்றுநாற்பத்தைந்து (745) அடிகளைக் கொண்டதுள்ளலோசையுடைய தெள்ளிய தமிழ்ப்பாட்டான் இயன்றது. குயில் பாடும் இசைப்பாட்டாக இடையில் அமைந்த பத்துக் கண்ணிகளைத் தவிர, மற்றைப் பகுதிகள் அனைத்தும் கலிவெண்பாவுக்குரிய இலக்கண அமைதி பெற்று இலகுவதொன்றாகும்.

அறிஞர்கள் இலக்கியத்தை ஐந்து வகையாகப் பிரிப்பர். அவையாவன: *1. தனிமனிதனின் சொந்த அனுபவத்தைப் பற்றியது. 2. மக்களின் பொதுவான அனுபவம் பற்றியது. 3. சமுதாயத்தைப் பற்றியது. 4. மனிதனுக்கும் இயற்கைக்கும் உள்ள உறவைப் பற்றியது. 5. மனிதனுடைய சொந்த முயற்சியில் - கற்பனையில் முகிழ்த்த புதுமை பற்றியது. இவ்வைந்து வகையுள் இறுதியிற் கூறப்பெற்ற இலக்கிய வகையைச் சார்ந்தது பாரதியாரின் குயிற் பாட்டு. அக் கவிஞரின் சொந்தக் கற்பனையில் தோன்றிய முதல் நூலாகச் செந்தமிழ்ப் படைப்பாகத் திகழும் திறம் வாய்ந்தது குயிற் பாட்டு. உயர்ந்த கருத்தை எளிய முறையில், இனிய நடையில் தெளிவுற விளக்கும் தீந்தமிழ்ப் பனுவலாகத் திகழ்வது குயிற் பாட்டு. பாரதியாரின் கற்பனைச் சிகரமாகவும் கவிதைக்

---

* 1. 'Personal experience of an individual as an individual. 2. Experience of a man as a man. 3. Relations of the individual with his fellows. 4. External world of nature and our relations. 5. Man's own effort to create and express'— W. H. Hudson.

கலையின் முடிமணியாகவும் ஒளிரும் உயர்வுடையது குயிற் பாட்டு. தன்னுணர்ச்சியின் திரட்சி வடிவாய்த் திகழும் இப் பாட்டு, தன்னுணர்ச்சிக் கவிதைக்கே (Lyric) ஒரு சிறந்த எடுத்துக் காட்டு எனலாம். கடவுளரையும் காவலரையும் கன்னியரையும் கதைப்பொருளாகக் கொண்டு, பண்டைப் புலவரெல்லாம் பைந்தமிழ்க் காவியம் படைத்திருக்கவும், சிறியதொரு பறவையாகிய குயிலைக் கதைப் பொருளாகக் கொண்டு, இலக்கியம் படைத்தளித்த பெருமை கவிஞர் பாரதியாருக்கே உரிமையாகும்!

கீதம் பாடும் குயிலின் குரல் நாத இன்ப வெள் ளத்தில் உள்ளத்தைப் பறிகொடுத்த கவிஞராகிய பாரதியார், அக்குயிலே முன்னைப் பிறவியில் வேடர் குல வேந்தன் மகளாகப் பிறந்து, சேர வேந்தன் செல்வ மைந்த னைத் தோன்றியிருந்த தம்மைக் காதல் இன்ப வெள்ளத் தில் ஆழ்த்திய திறத்தைக் குயிலின் வாயிலாகவே பொதிய மலை முனிவர் புகன்ற வரலாறென்று எடுத்துரைத்து, எல்லோரையும் காதல் இன்ப வெள்ளத்தில் மூழ்குமாறு செய்யும் அவரது கவித்திறம் படித்துப் படித்துச் சுவைத்து இன்புறத்தக்கதாகும்.

கவிஞர் பாரதியார் புதுச்சேரியில் வாழ்ந்த நாளில் அந்நகரின் மேற்பால் அமைந்த மாஞ்சோலைக்கு மாலை நேரத்தில் உலாப்போதல் சாலப் பெருகிய வழக்கம் போலும். அச்சோலைக்கண் பல்வேறு பறவையினங்களும் கூடியிருந்து பேரொலி யெழுப்பும். அவற்றிடையே குயிற் பறவைகள் இன்னிசை பாடி, வருவோர்க்குப் பெருமகிழ்வூட்டும். அந்த இன்பத்தை நாள்தோறும் நன்கு துய்த்த பாரதியார் ஒரு நாள் மாலை வேளையில் வழக்கம் போல் சோலை புகாது, வீட்டி லிருந்து தமிழாய்ந்து கொண்டிருந்தவர் களைப்பு மிகுதியால் தம் விழிகளைத் துயில் தழுவ உறங்கிவிட்டார். அத்துயி லிடையே கண்ட கனவையே குயிலின் பாட்டாகக் கொழி தமிழ்த் தேனில் குழைத்துக் கவிதைச் சுவையூட்டி, இன்னிசைத் தெள்ளமுதாக ஆக்கித் தந்துள்ளார்.

குயிலின் இசைப்பாட்டில் கவிஞர் காட்டியுள்ள கருத்துக்கள் உயர்ந்த தத்துவ உண்மைகளாகும். "காதல் போயிற் சாதல், அருளொளி அவியுமாயின் இருள், இன்பத்திற்கு எல்லை கண்டால் அது துன்பம், நாதத்திற்கு நலி வேறுபட்டால் சேதம், தாளத்திற்குத் தடையுண்டானால் இசை ஒரு கூளம், பண்ணிற்குப் பழுதுண்டாயின் அது மண், புகழுக்குப் புரையுண்டாயின் இகழ், உறுதிக்கு உடைவுண்டாயின் இறுதி, கூடிய குமரன் பிரிந்தால் குலைவுதரும் வாட்டம், இசை தரும் குழல் உடைந்தால் அது வீணே!" இவ்வாறு 'ஒன்றைப் பற்றி ஒன்று நிற்றலே வாழ்வில் இன்பம் தருவது; பிரிவு பெருந்துன்பத்தை விளைப்பது' என்னும் உண்மையை வலியுறுத்தி நிற்பதாகக் குயிலின் பாட்டு அமைந்திருப்பது கொள்ளையின்பம் விளைப்பதாகும்.

குயில் தனது காதற் கதையை ஓதத் தொடங்கி, அஃது இயற்கை இசை வெள்ளத்தில் உள்ளத்தைப் பறிகொடுத்த திறத்தை விளக்குவது வியத்தற்குரியது. பறவைகளின் ஒலி, மரங்களிடையே காற்றெழுப்பும் ஓசை, ஆற்றுவெள்ளத்தில் எழும் அரிய ஓசை, அருவியின் இனிய ஒலி, நீலக்கடலில் அலைகள் இடையறாது எழுப்பும் ஓசை, மங்கையர் பாடும் பண்ணமைந்த கீத நாதம், ஏற்றப்பாட்டு, வள்ளைப்பாட்டுக்களின் தெள்ளமுத ஓசை, சுண்ணம் இடிப்பாரின் வண்ண இசை, பள்ளர் பாடும் பண்ணமைந்த பள்ளுப்பாட்டின் ஓசை, கும்மிப் பாடலின் குளிர்ந்த இசை, குழலிசை, வீணையின் நாதம் இவற்றையெல்லாம் அனுபவித்த நலத்தைக் குயில் எடுத்துரைக்கின்றது.

குயில் தனது பழம்பிறப்பின் வரலாறு பற்றிப் பொதியமலைக்கண் வாழ்ந்த முனிபுங்கவரை வழிபட்டு அறிந்தவாற்றை மொழிந்துருகும் திறம் படித்து இன்புறற்குரியது. கவிஞர் அக்குயிலின்பாற் கொண்ட ஐயத்தையெல்லாம் அகற்றுமாறு திறம்படவும் நயம்படவும் எடுத்துரைக்கின்றது.

"வேடர்குலத் தலைவனாய வீரமுருகன் என்பானின் சீரிய மகளாகப் பிறந்து வளர்ந்து பருவமெய்திய சின்னக்குயிலியை அவளது உற்ற மாமன் மகனாகிய மாடன் மணஞ்செய்து கொள்ள மனங்கொண்டான். தேன்மலைக்குத் தலைவனாகிய மொட்டைப் புலியன் தன் மைந்தனாகிய நெட்டைக் குரங்கனுக்கு அவளைப் பெண் வேண்டினான். வீரமுருகனோ தன் மகளை நெட்டைக்குரங்கனுக்கே கட்டிக்கொடுக்க இசைந்தான். இச்செய்தி அறிந்த மாடன் மனம் புகைந்தான். அவனுக்குச் சின்னக்குயிலி ஆறுதல் கூறியகன்றாள்.

மணநாளுக்கு முன்னர் ஒருநாள் சின்னக்குயிலி, தன்னை யொத்த தோழியருடன் மாலை வேளையிற் சோலை யொன்றிற் புகுந்து விளையாடிக் கொண்டிருந்தாள். அப்போது மான் வேட்டை யாடிவந்த சேரமான் மைந்தனாகிய இளவரசன் சின்னக்குயிலியைக் கண்டு காதல் கொண்டான். அவளும் மன்னவன் மகனைக் கண்டு மாமோகம் கொண்டு நின்றாள்.

'கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல'

என்பது உண்மையன்றோ! அவர்கள் ஈருடல் ஓருயிராயினர். தேனில் விழும் வண்டைப்போல, காந்தமிசை வீழும் காரிரும்பைப் போல, ஆவலுடன் அவளை அரசகுமாரன் ஆரத்தழுவி இன்புற்றான். இவர்கள் கூடியிருக்கும் இன்பக் காட்சியை மாடனும் குரங்கனும் ஓடி வந்து பார்த்து உள்ளங் கொதித்தனர். இருவரும் கோப வெறி கொண்டனர். இந்நிலையைக் கவிஞர் குறிப்பிடும் நயம் வியப்பிற் குரியது.

'ஆவிக் கலப்பின் அமுத சுகந்தனிலே
மேவியங்கு மூடி யிருந்த விழிநான்கு
ஆங்கவற்றைக் கண்டமையால் ஆவியிலே தீப்பற்றி
ஓங்கும் பொறிகள் உதிர்க்கும் விழிநான்கு'

மன்னவன் மகனைக் கொல்லுதற்கு மாடனும் குரங்கனும் வாளோங்கி வந்தனர். வேந்தன் முதுகில் இருவரும்

வாளைப் பாய்ச்சினர். சட்டெனத் திரும்பிய மன்னன் தன் வாளையுருவி வீச்சிரண்டில் அவர்கள் இருவரையும் வெட்டி வீழ்த்தினான். வெட்டுண்ட வேந்தனும் சிறு போழ்தில் மாய்ந்திட்டான். அவன் இறக்கும்போது,

''இன்னும் பிறவியுண்டு, மாதரசே! இன்பமுமுண்டு
நின்னுடனே வாழ்வன் இனி நேரும் பிறப்பினிலே''

என்று சொல்லிக் கண்மூடி உயிர்நீத்தான்.

சின்னக் குயிலியின் மாமன் மகனாகிய மாடன் செய்த மாயச் செயலால் அவள் மறுமையில் பறவையுருக் கொண்டு பதைபதைக்கின்றாள். மன்னவனோ மறுமையில் தொண்டை நாட்டுப் புதுவைப் பட்டினத்தில் தண்டமிழ்க் கவிஞனாகத் தோன்றி வாழ்கின்றான். புவிமன்னன் மகன் கவிமன்னன் ஆயினான். முன்னைப் பிறப்பில் சின்னக்குயிலியை மணம் புரிய விரும்பிய மாடனும் குரங்கனும் பேய் வடிவு கொண்டு அக்குயிலையே பின்தொடர்கின்றனர். முன்னைப் பிறப்பின் தொடர்பால் கவிஞன் குயிலைக் கண்டு, அதன் குரலிசையில் மனமறுகி நிற்கும் வேளையில் மாடும் குரங்கும் அவனுக்கு ஐயத்தையும் வெறுப்பையும் அடங்காத சினத்தையும் விளைத்து நிற்கின்றன."

இந்த உண்மையெல்லாம் குயில் எடுத்துரைத்துக் கவிஞன் கரத்தில் வீழ்ந்தது. அவன் அதனை ஆவலுடன் எடுத்து இன்பமீதூர முத்தமிட்டான். அவ்வளவுதான், அவன் கரம்பட்டவுடன் குயில் கொள்ளையின்பம் தரும் தெள்ளமுதத் தெய்வீகப் பாவையாக மாறியது. அப் பெண்ணின் நல்லாள் வைத்த கண் மாற்றாது கவிஞனை நோக்கினாள்.

''சற்றே தலைகுனிந்தாள், சாமீ! இவள் அழகை
எற்றே தமிழில் இசைத்திடுவேன்''

என்று கூறிப் பெண்ணின் பேரெழில் நலத்தை வியந்து பேசும் கவிஞரின் கற்பனைத்திறம் அற்புதமானது!

"கற்றவர்க்குச் சொல்வேன்; கவிதைக் கனிபிழிந்த
காற்றினிலே, பண்கூத்(து) எனுமிவற்றின் சாரமெலாம்
ஏற்றி அதனோடே இன்னமுதைத் தான்கலந்து
காதல் வெயிலிலே காயவைத்த கட்டியினால்
மாதவளின் மேனி வகுத்தான் பிரமன்என்பேன்"

என்று கூறிக் களிக்கும் கவிஞரின் கவிநயம் படித்துச் சுவைத்தற்குரியதாகும்.

இப்பாட்டை முடிக்கும் பாரதியார் இறுதியில், இது கனவிற் கண்ட கற்பனையே யானாலும்,

'வேதாந்த மாக விரித்துப் பொருளுரைக்க
யாதானும் சற்றே இடமிருந்தாற் கூறீரோ?'

என்று ஆன்ற தமிழ்ப் புலவர்க்கு ஒரு வேண்டுகோள் விடுத்துள்ளார்.

இக்குயிற்பாட்டு ஒரு காதற் கதை போன்று தோன்றினாலும் தத்துவக் கருத்துக்களைத் தன்னகத்தே கொண்டொளிரும் தண்டமிழ்ப் பனுவலாக விளங்குகிறது. "கருத்தொருமித்த காதலர் இருவர் மண்ணுலகில் நல்ல வண்ணம் வாழ்ந்து இன்புறுவதோடு, அடுத்து வரும் பிறப்புக்களிலும் சிறப்புறக் கூடி வாழும் பீடு பெறுவர்" என்ற உண்மையைத் திண்மையுறக் காட்டி நிற்பது இப் பாட்டு.

இக்கதையில் பொதிய மலை முனிவர், கவிஞர், குயில், முதலிய பாத்திரங்கள் பயின்று வருகின்றன. முற்பிறப்பில் குயில், வேடர் குலத் தலைவன் மகள் சின்னக் குயிலியாகச் சிறந்து விளங்கிற்று. அப்போது அவளை மாடன், நெட்டைக் குரங்கன், சேரநாட்டு இளவரசன் ஆகிய மூவரும் விரும்பினர். ஆனால் குயிலியோ வேந்தன் மகனையே விரும்பினாள். அவள் காதலுக்குத் தடையாக மாடனும் குரங்கனும் இடை நின்றனர். இப் பிறப்பில் சின்னக் குயிலி கன்னங் கரிய குயிலாகப் பிறந்தாள். அக் குயிலோ கவிஞன்பால் உண்மைக் காதல் கொண்டு உழன்

றது. அதற்குத் தடையாகக் குரங்கனும் மாடனும் முறையே குரங்காகவும் மாடாகவும் பொய்த் தோற்றம் காட்டிப் புன்மைப் பேய்களாகத் திரிகின்றனர். இந் நிகழ்ச்சிகளில் சித்தாந்த உண்மைகளாகிய பதி—பசு—பாச இலக்கணத்தைக் கவிஞர் பொருத்திக் காட்டுவதாகக் கருதுான்றிக் காணலாம்.

ஆணவம், கன்மம், மாயை என்னும் பாசங்களோடு கட்டுண்டுழலும் உயிராகிய பசு, அக் கட்டுக்களினின்று விடுபட்டு, இறைவனாகிய பதியை அடைய வேண்டும். இதுவே சமயத் தத்துவமாகிய சித்தாந்த உண்மை. முற்பிறப்பில் சின்னக்குயிலியாகிய பசு, சேரமன்னன் மகனாகிய பதியை அடைய விழையும்போது, மாடனும் குரங்கனும் பாசமாக நின்று தடைசெய்கின்றனர். மாடன்பால் காட்டும் அன்பும் பெற்றோர்மீது கொள்ளும் பற்றும் ஆங்கு மாயையாக நின்று தடுக்கின்றன. இப் பிறப்பில் குயிலாகிய பசு, கவிஞனாகிய பதியை நாடுகிறது. ஆனால் பேய்களாகிய குரங்கும் மாடும் ஆணவகன்ம மலங்களாகவும் காதல் மாயையாகவும் நின்று தடுக்கின்றன. எனவே, மும்மலங்களிற் சிக்குண்டு உழலும் ஆன்மா, பதியாகிய இறைவனையடைந்து அந்தமில் இன்பத்தைத் துய்த்தற்கு எத்துணை முயன்றாலும் காதலாம் மாயையின் கட்டினால் ஆணவம், கன்மம் இவற்றினின்று விடுபட முடியாமல் பெரிதும் இடர்ப்படும் எனத் தெளியலாம்.

> 'அவாஎன்ப(து) எல்லா உயிர்க்கும் எஞ் ஞான்றும்
> தவாஅப் பிறப்பீனும் வித்து'

ஆசையே பிறபபிற்கு வித்தாவது என்றும்,

> 'காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றின்
> நாமம் கெடக்கெடும் நோய்'

அவ்வாசை ஒழியவே பிறவித்துன்பம் அற்றொழியும் என்றும் இக் குயிற்பாட்டால் கவிஞர் பாரதியார் பாருலக மக்கட்குச் சீரிய வேதாந்த உண்மையினை விளக்கிப் போந்தார்.

# நூலாசிரியர் வரலாறு

'குயிற் பாட்டு' என்னும் இச்சிறு நூலை இயற்றிய ஆசிரியர் தேசிய கவி சி. சுப்பிரமணிய பாரதியார் ஆவர். இவர் திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த எட்டைய புரம் என்னும் ஊரில் பார்ப்பனர் குலத்தில் தோன்றியவர். இவருடைய பெற்றோர் சின்னச்சாமி ஐயர், இலக்குமி யம்மாள் என்போர் ஆவர். இவர் கி. பி. 1882 ஆம் ஆண்டு, திசம்பர் 11 ஆம் நாள் (கார்த்திகைத் திங்கள் மூல நாள்) பிறந்தார். இவர் தமது ஐந்தாம் வயதில் தாயை இழந்தார். அதனால் இவர் தந்தையார் 1889 இல் வள்ளியம்மாள் என்னும் வனிதையரை மறுமணம் புரிந்து கொண்டார். இந்த அம்மையாரே பாரதியாரைச் சீருடன் போற்றி வளர்த்த செவிலித்தாய் ஆவர். பாரதியாருக்குப் 'பாகீரதி' என்னும் ஒரு சகோதரியும் இருந்தார்.

தந்தையாராகிய சின்னச்சாமி ஐயர் சிறந்த தமிழ்ப் புலமை யுடையவராதலின் பாரதியார் அவரிடமே ஆரம்பக் கல்வியைப் பெற்றார். இவர் தமது இளம்பருவந் தொட்டே இனிய செய்யுட்களை இயற்றி வந்தார். ஆதலின் இவரது பத்தாண்டுப் பருவத்தில் எட்டையபுர மன்னர், புலவர் பலர் கூடிய தமது அரசவையில் இவருக்குப் 'பாரதி' என்ற பட்டத்தைச் சூட்டிப் பாராட்டினர். 1894 இல் திருநெல் வேலி இந்துக் கலாசாலையில் கல்வி பயிலத் தொடங்கிய பாரதியார் அங்கு ஐந்தாம் படிவம் வரை (ஒன்பதாம் வகுப்பு) வரையில் பயின்றார். இவர் திருநெல்வேலியில் கல்வி கற்கும் காலத்திலேயே 1897 ஜூன் 15 ஆம் நாளில் கடையம் செல்லப்பா ஐயரின் மகளார் செல்லம்மாளைத் திருமணம் புரிந்து கொண்டார்.

1898 ஜூன் மாதம் தந்தையார் காலமான காரணத்தால் பாரதியார், காசியில் வாழ்ந்து வந்த தம் அத்தையார் குப்பம்மாளின் ஆதரவில் 1898 இல் காசி இந்துக் கலாசாலை

யில் பயின்று மெட்ரிகுலேஷன் தேர்வில் தேர்ச்சி பெற்றார். அதன்பின் அலகபாத்துப் பல்கலைக் கழகப் புகுமுகத் தேர்வில் முதல்வராகத் தேறினார். 1902 இல் எட்டையபுர மன்னரின் அழைப்பை அன்புடன் ஏற்று ஆங்கு வந்து சேர்ந்தார். ஆங்கு அரசவைக் கவிஞராகப் பணியேற்று அணிபெற்று விளங்கினார். ஆங்குத் தம் மனைவியுடன் இனிய இல்லறத்தை நடத்தினார். அடுத்த ஆண்டிலேயே அரசவைப் புலவர் பணியினின்று நீங்கி, மதுரைச் சேதுபதி கலாசாலையில் தமிழாசிரியராய்ப் பணியேற்றார். 1904 இல் சென்னை சென்று 'சுதேச மித்திரன்' நாளிதழுக்குத் துணையாசிரியராய்ப் பணியேற்றார். இந்நாளில்தான் பாரதியாருக்குத் தங்கம்மாள் என்னும் மூத்த மகள் தோன்றினார்.

1907—ஏப்பிரல் திங்களில் பாரதியார் 'இந்தியா' என்ற செய்தித்தாளின் ஆசிரியரானார். அப்போது 'பாலபாரதம்' என்ற ஆங்கில இதழையும் நடத்தி வந்தார். 1908 இல் தாம் பாடிய சுதேச கீதங்களை வெளியிட்டார். இந்நாளில் பாரதியார் இந்திய விடுதலைக் கிளர்ச்சியின் காரணமாக நாடு கடத்தப்பட்டுப் புதுச்சேரியில் சென்று வாழலானார். அவர் மனைவி செல்லம்மாளும் புதுச்சேரிக்கு வந்து சேர்ந்தார். இங்கு வாழ்ந்த காலத்தில்தான் கண்ணன் பாட்டு, 'குயிற் பாட்டு', பாஞ்சாலி சபதம் ஆகியவற்றைப் பாரதியார் பாடி வெளியிட்டார். 1918 திசம்பரில் புதுச்சேரியை விட்டுப் புறப்பட்ட பாரதியாரைக் கடலூரில் அரசினர் கைது செய்தனர். அவர் நண்பர்கள் முயற்சியால் விடுதலை பெற்றார்; சில காலம் கடையத்தில் சென்று வாழ்ந்தார். 1920 இல் மீண்டும் 'சுதேசமித்திரன்' துணையாசிரியராய்ச் சென்னை சென்று சேர்ந்தார். 1921 இல் காந்தியடிகளைக் கண்டு அளவளாவி இன்புற்றார்.

பாரதியார் சென்னையில் வாழ்ந்து வந்த பின்னாளில் ஒருநாள் கோவில் யானையொன்றற்குக் கரும்பருத்துங்கால் அதனால் தூக்கி எறியப்பட்டார். அந்த அதிர்ச்சியால்

1921 செப்டம்பர் 11 ஆம் நாள் இவ்வுலக வாழ்வை நீத்துப் புகழுடம்பை நிலைநாட்டினார். அவரது அழியாத நினைவுச் சின்னமாக அவர் தோன்றிய எட்டயபுரத்தில் 1948 ஆம் ஆண்டில் பாரதி மண்டபம் எழுப்பப் பெற்றது. அதனை அந்நாளில் மேற்கு வங்க ஆளுநராக விளங்கிய சக்கரவர்த்தி இராசகோபாலாச்சாரியார் அவர்கள் திறந்து வைத்தனர்.

---

# தேசியகவி சி. சுப்பிரமணிய பாரதியார்

பாடிய

# குயிற் பாட்டு



## 1. சோலைக் குயில்

காலை யிளம்பரிதி வீசுங் கதிர்களிலே
நீலக் கடலோர் நெருப்பெதிரே சேர்மணிபோல்
மோகனமாஞ் சோதி பொருந்தி முறைதவறா
வேகத் திரைகளினால் வேதப் பொருள்பாடி
வந்து தழுவும் வளஞ்சார் கரையுடைய 5
செந்தமிழ்த் தென்புதுவை யென்னுந் திருநகரின்
மேற்கே சிறுதொலையில் மேவுமொரு மாஞ்சோலை;
நாற்கோணத் துள்ளபல நத்தத்து வேடர்களும்
வந்து பறவைசுட வாய்ந்த பெருஞ்சோலை;
அந்தமாஞ் சோலை யதனிலோர் காலையிலே 10
வேடர்வாராத விருந்துத் திருநாளில்
பேடைக் குயிலொன்று பெட்புறவோர் வான்கிளையில்
வீற்றிருந்தே ஆண்குயில்கள் மேனி புளகமுற
ஆற்றல் அழிவுபெற உள்ளத் தனல்பெருக
சோலைப் பறவையெலாம் சூழ்ந்து பரவசமாய்க் 15
காலைக் கடனிற் கருத்தின்றிக் கேட்டிருக்க
இன்னமுதைக் காற்றினிடை எங்குங் கலந்ததுபோல்,
மின்னற் சுவைதான் மெலிதாய் மிகவினிதாய்
வந்து பரவுதல்போல், வானத்து மோகினியாள்
இந்தவுரு வெய்தித்தன் ஏற்றம் விளக்குதல்போல், 20

இன்னிசைத்தீம் பாடல் இசைத்திருக்கும் விந்தைதனை
முன்னிக் கவிதைவெறி மூண்டே நனவழியப்
பட்டப்பகலிலே பாவலர்க்குத் தோன்றுவதாம்
நெட்டைக் கனவின் நிகழ்ச்சியிலே கண்டேன்யான்;
கன்னிக் குயிலன்று காவிடத்தே பாடியதோர் 25
இன்னிசைப் பாட்டினிலே யானும் பரவசமாய்,
"மனிதவுரு நீங்கிக் குயிலுருவம் வாராதோ?
இனிஇக் குயிற்பேட்டை என்றும் பிரியாமல்
காதலித்துக் கூடிக் களியுடனே வாழோமோ?
நாதக் கனலிலே நம்முயிரைப் போக்கோமோ?" 30
என்றுபல வெண்ணி ஏக்கமுறப் பாடிற்றால்;
அன்றுநான் கேட்ட(து) அமரர்தாங் கேட்பாரோ?
குக்குக்கு வென்று குயில்பாடும் பாட்டினிலே
தொக்க பொருளெல்லாம் தோன்றியதென் சிந்தைக்கே;
அந்தப் பொருளை அவனிக் குரைத்திடுவேன்; 35
விந்தைக் குரலுக்கு; மேதினியீர்! என்செய்கேன்!

## 2. குயிலின் பாட்டு

காதல், காதல், காதல்,
காதல் போயிற் காதல் போயிற்
சாதல், சாதல், சாதல் — காதல்

1. அருளே யாம்நல் லொளியே;
ஒளிபோ மாயின், ஒளிபோ மாயின்,
இருளே, இருளே, இருளே. — காதல்

2. இன்பம், இன்பம், இன்பம்;
இன்பத் திற்கோர் எல்லை காணில்,
துன்பம், துன்பம், துன்பம் — காதல்

3. நாதம் நாதம், நாதம்;
நாதத் தேயோர் நலிவுண் டாயின்,
சேதம் சேதம் சேதம். — காதல்

4. தாளம், தாளம், தாளம்;
தாளத் திற்கோர் தடையுண் டாயின்,
கூளம், கூளம், கூளம். — காதல்

5. பண்ணே, பண்ணே, பண்ணே;
பண்ணிற் கேயோர் பழுதுண் டாயின்,
மண்ணே, மண்ணே, மண்ணே. காதல்

6. புகழே, புகழே, புகழே;
புகழுக் கேயோர் புரையுண் டாயின்,
இகழே, இகழே, இகழே. காதல்

7. உறுதி, உறுதி, உறுதி;
உறுதிக் கேயோர் உடைவுண் டாயின்,
இறுதி, இறுதி, இறுதி. காதல்

8. கூடல், கூடல், கூடல்;
கூடிப் பின்னே குமரன் போயின்,
வாடல், வாடல், வாடல். காதல்

9. குழலே, குழலே, குழலே;
குழலிற் கீறல் கூடுங் காலை,
விழலே, விழலே, விழலே. காதல்

## 3 குயிலின் காதற் கதை

மோகனப் பாட்டு முடிவுபெறப் பாரெங்கும்
ஏக மவுனம் இயன்றதுகாண்; மற்றதிலோர்
இன்ப வெறியுந் துயரும் இணைந்தனவால்.
பின்புநான் பார்க்கப் பெடைக்குயிலஃ தொன்றல்லால்
மற்றைப் பறவை மறைந்தெங்கோ போகவும்இவ் 5
வொற்றைக் குயில்சோக முற்றுத் தலைகுனிந்து
வாடுவது கண்டேன்; மரத்தருகே போய்நின்று,
"பேடே! திரவியமே பேரின்பப் பாட்டுடையாய்!
ஏழுலகும் இன்பத்தீ ஏற்றுந் திறனுடையாய்!
பிழையுனக் கெய்தியதென்? பேசாய்!" எனக்கேட்டேன். 10
மாயக் குயிலதுதான் மானுடவர் பேச்சினிலே
மாயச்சொல் கூற மனந்தீ யுறநின்றேன்;
"காதலை வேண்டிக் கரைகின்றேன், இல்லையெனில்
சாதலை வேண்டித் தவிக்கின்றேன்" என்றதுவால்.
"வானத்துப் புள்ளெல்லாம் மையலுறப் பாடுகிறாய்; 15

ஞானத்திற் புட்களிலும் நன்கு சிறந்துள்ளாய்;
காதலர் நீ எய்துகிலாக் காரணந்தான் யா(து)'' என்றேன்.
வேதனையும் நாணும் மிகுந்த குரலினிலே
கானக் குயிலி கதைசொல்ல லாயிற்று:—
''மானக் குலைவும் வருத்தமும்நான் பார்க்காமல், 20
உண்மை முழுதும் உரைத்திடுவேன் மேற்குலத்தீர்!
பெண்மைக் கிரங்கிப் பிழைபொறுத்தல் கேட்கின்றேன்;
அறிவும் வடிவுங் குறுகி, அவனியிலே
சிறியதொரு புள்ளாய்ச் சிறியேன் பிறந்திடினும்
தேவர் கருணையிலோ தெய்வச் சினத்தாலோ, 25
யாவர் மொழியும் எளிதுணரும் பேறுபெற்றேன்;
மானுடவர் நெஞ்ச வழக்கெல்லாம் தேர்ந்திட்டேன்;
கானப் பறவை கலகலெனும் ஓசையிலும்
காற்று மரங்களிடைக் காட்டும் இசைகளிலும்
ஆற்றுநீ ரோசை அருவி யொலியினிலும் 30
நீலப் பெருங்கடலெந் நேரமுமே தானிசைக்கும்
ஓலத் திடையே உதிக்கும் இசையினிலும்,
மானுடப் பெண்கள் வளருமொரு காதலினால்
ஊனுருகப் பாடுவதில் ஊறிடுந்தேன் வாரியிலும்,
ஏற்றநீர்ப் பாட்டின் இசையினிலும், நெல்லிடிக்கும் 35
கோற்றொடியார் குக்குவெனக் கொஞ்சும் ஒலியினிலும்
சுண்ணமிடிப் பார்தம் சுவைமிகுந்த பண்களிலும்
பண்ணை மடவார் பழகுபல பாட்டினிலும்
வட்டமிட்டுப் பெண்கள் வளைக்கரங்கள் தாமொலிக்கக்
கொட்டி யிசைத்திடுமோர் கூட்டமுதப் பாட்டினிலும் 40
வேயின் குழலோடு வீணைமுத லாமனிதர்
வாயினிலும் கையாலும் வாசிக்கும் பல்கருவி
நாட்டினிலும் காட்டினிலும் நாளெல்லாம் நன்கொலிக்கும்
பாட்டினிலும் நெஞ்சைப் பறிகொடுத்தேன் பாவியேன்;
நாவும் மொழிய நடுக்கமுறும் வார்த்தைகளைப் 45
பாவிமனந் தானிறுகப் பற்றிநிற்ப(து) என்னேயோ?
நெஞ்சத்தே தைக்க நெடுநோக்கு நோக்கிடுவீர்
மஞ்சரே, என்றன் மனநிகழ்ச்சி காணீரோ?
காதலை வேண்டிக் கரைக்கின்றேன், இல்லையெனில்,

சாதலை வேண்டித் தவிக்கின்றேன்'' என்றதுவே. 50
சின்னக் குயிலிதனைச் செப்பியவப் போழ்தினிலே,
என்னைப் புதியதோர் இன்பச் சுரங்கவர
உள்ளத் திடையும் உயிரிடையும் ஆங்கந்தப்
பிள்ளைக் குயிலினதோர் பேச்சன்றி வேறற்றேன்!
''காதலோ காதலினிக் காதல் கிடைத்திலதேல் 55
சாதலோ சாதல்'' எனச் சாற்றுமொரு பல்லவியென்
உள்ளமாம் வீணைதனில் உள்ளவீ(டு) அத்தனையும்
விள்ள ஒலிப்பதலால் வேறோர் ஒலியில்லை;
சித்தம் மயங்கித் திகைப்பொடுநான் நின்றிடவும்
அத்தருணத் தேபறவை யத்தனையும் தாந்திரும்பிச் 60
சோலைக் கிளையிலெல்லாம் தோன்றி யொலித்தனவால்.
நீலக் குயிலும் நெடிதுயிர்த்தாங்(கு) இஃதுரைக்கும்;
''காதல் வழிதான் கரடுமுர டாமென்பர்;
சோதித் திருவிழியீர்! துன்பக் கடலினிலே
நல்லுறுதி கொண்டதோர் நாவாய்போல் வந்திட்டீர்; 65
அல்லலுற நும்மோ(டு) அளவளாய் நான்பெறுமிவ்
வின்பத் தினுக்கும் இடையூறு மூண்டதுவே!
அன்பொடு நீரிங்கே அடுத்தநான் காம்நாளில்
வந்தருளல் வேண்டும், மறவாதீர், மேற்குலத்தீர்!
சிந்தை பறிகொண்டு செல்கின்றீர் வாரீரேல் 70
ஆவி தரியேன், அறிந்திடுவீர் நான்காம்நாள்;
பாவியிந்த நான்குநாள் பத்துயுக மாக்கழிப்பேன்;
சென்று வருவீர்,என் சிந்தைகொடு போகின்றீர்,
சென்றுவரு வீர்'' என்னத் தேறாப் பெருந்துயரம்
கொண்டு சிறுகுயிலும் கூறி மறைந்ததுகாண். 75

## 4. காதல் வேதனை

கண்டதொரு காட்சி கனவுநன(வு) என்றறியேன்,
எண்ணுதலும் செய்யேன் இருபதுபேய் கொண்டவன்போல்
கண்ணும் முகமும் களியேறிக் காமனார்
அம்பு நுனிகள் அகத்தே அமிழ்ந்திருக்கக்,
கொம்புக் குயிலுருவம் கோடிபல கோடியாய் 5

ஒன்றே யதுவாய் உலகமெலாம் தோற்றமுறச்
சென்றே மனைபோந்து சித்தந் தளர்வின்றி,
நாளொன்று போவதற்கு நான்பட்ட பாடனைத்தும்
தாளம் படுமோ? தறிபடுமோ? யார்படுவார்?
நாளொன்று போயினது; நானும் எனதுயிரும் 10
நீளச் சிலைகொண்டு நின்றதொரு மன்மதனும்
மாயக் குயிலுமதன் மாமாயத் தீம்பாட்டும்
சாயைபோல் இந்திரமா சாலம்போல் வையமுமா
மிஞ்சிநின்றோம் ஆங்கு மறுநாள் விடிந்தவுடன்,
வஞ்சனை நான் கூறவில்லை, மன்மதனார் விந்தையால், 15
புந்திமனம் சித்தம் புலனொன்(று) அறியாமல்,
வித்தைசெயும் சூத்திரத்தின் மேவுமொரு பொம்மையெனக்
காலிரண்டும் கொண்டு கடுகவும்நான் சோலையிலே
நீலிதனைக் காணவந்தேன், நீண்ட வழியினிலே
நின்றபொருள் கண்ட நினைவில்லை; சோலையிடைச் 20
சென்றுநான் பார்க்கையிலே, செஞ்ஞாயிற் றொண்கதிரால்
பச்சைமர மெல்லாம் பளபளென, என்னுளத்தின்
இச்சை யுணர்ந்தனபோல் ஈண்டும் பறவையெலாம்
வேறெங்கோ போயிருப்ப, வெம்மைக் கொடுங்காதல்
மீறவெனைத் தான்புரிந்த விந்தைச் சிறுகுயிலைக் 25
காணநான் வேண்டிக் கரைகடந்த வேட்கையுடன்
கோணமெலாம் சுற்றிமரக் கொம்பையெலாம் நோக்கிவந்
[தேன்.

## 5. குயிலும் குரங்கும்

மற்றைநாட் கண்ட மரத்தே குயிலில்லை,
சுற்றுமுற்றும் பார்த்துத் துடித்து வருகையிலே,
வஞ்சனையே! பெண்மையே! மன்மதனும் பொய்த்தேவே!
நெஞ்சகமே! தொல்விதியின் நீதியே! பாழுலகே!
கண்ணாலே நான்கண்ட காட்சிதனை என்னுரைப்பேன்! 5
பெண்ணால் அறிவிழக்கும் பித்தரெலாம் கேண்மின்றோ!
காதலினைப் போற்றும் கவிஞரெலாம் கேண்மின்றோ!
மாதரெலாம் கேண்மின்றோ! வல்விதியே கேளாய்நீ!
மாயக் குயிலோர் மரக்கிளையில் வீற்றிருந்தே

பாயும் விழிநீர் பதைக்கும் சிறியவுடல் 10
விம்மிப் பரிந்துசொலும் வெந்துயர்ச்சொல் கொண்டதுவாய்.
அம்மவோ! மற்றாங்கோர் ஆண்குரங்கு தன்னுடனே
ஏதேதோ கூறி இரங்கும் நிலைகண்டேன்;
தீதேது? நன்றேது? செய்கைத் தெளிவேது?
அந்தக் கணமே அதையும் குரங்கினையும் 15
சிந்தக் கருதி உடைவாளிற் கைசேர்த்தேன்;
கொன்றுவிடு முன்னே, குயிலுரைக்கும் வார்த்தைகளை
நின்றுசற்றே கேட்பதற்(கு)என் நெஞ்சம் விரும்பிடவும்,
ஆங்கவற்றின் கண்ணில் அகப்படா வா(று) அருகே
ஓங்குமரத் தின்பால் ஒளிந்துநின்று கேட்கையிலே, 20
பேடைக் குயில்இதனைப் பேசியது:— வானரரே!
ஈடறியா மேன்மையழ(கு) ஏய்ந்தவரே! பெண்மைதான்
எப்பிறப்புக் கொண்டாலும், ஏந்தலே! நின்னழகைத்
தப்புமோ? மையல் தடுக்கும் தரமாமோ?
மண்ணிலுயிர்க் கெல்லாம் தலைவரென மானிடரே 25
எண்ணிநின்றார் தம்மை; எனில்ஒருகால், ஊர்வகுத்தல்
கோயில் அரசு, குடிவகுப்புப் போன்றசில
வாயிலிலே அந்த மனிதர் உயர்வெனலாம்;
மேனி அழகினிலும் விண்டுரைக்கும் வார்த்தையிலும்
கூனி யிருக்கும் கொலுநேர்த்தி தன்னிலுமே 30
வானரர்தம் சாதிக்கு மாந்தர் நிகர் ஆவாரோ?
ஆன வரையும் அவர்முயன்று பார்த்தாலும்
பட்டுமயிர் மூடப் படாத தமதுடலை
எட்டுடையால் மூடி எதிருமக்கு வந்தாலும்
மீசையையும் தாடியையும் விந்தைசெய்து வானரர்தம் 35
ஆசை முகத்தினைப்போல் ஆக்க முயன்றிடினும்
ஆடிக் குதிக்கும் அழகிலுமை நேர்வதற்கே
கூடிக் குடித்துக் குதித்தாலும் கோபுரத்தில்
ஏறத் தெரியாமல் ஏணிவைத்துச் சென்றாலும்
வே(று)எத்தைச் செய்தாலும் வேகமுறப் பாய்வதிலே 40
வானரர்போல் ஆவாரோ? வாலுக்குப் போவதெங்கே?
ஈனமுறுங் கச்சை இதற்கு நிகராமோ?
பாகையிலே வாலிருக்கப் பார்த்ததுண்டு கந்தைபோல்,

வேகமுறத் தாவுகையில் வீசி எழுவதற்கே
தெய்வம் கொடுத்த திருவாலைப் போலாமோ? 45
சைவசுத்த போசனமும் சாதுரியப் பார்வைகளும்
வானரர்போல் சாதியொன்று மண்ணுலகின் மீதுளதோ ?
வானரர்தம் முன்னே மணிபோல் உமையடைந்தேன்;
பிச்சைப் பறவைப் பிறப்பிலே தோன்றிடினும்
நிச்சயமா முன்புரிந்த நேமத் தவங்களினால் 50
தேவரீர் காதல்பெறும் சீர்த்திகொண்டேன்; தம்மிடத்தே
ஆவலினாற் பாடுகின்றேன்; ஆரியரே! கேட்டருள்வீர்."
வானரப் பேச்சினிலே மைக்குயிலி பேசியதை
யானறிந்து கொண்டுவிட்டேன், யாதோ ஒருதிறத்தால்.

காதல் காதல் காதல்;
காதல் போயிற் காதல் போயிற்
சாதல் சாதல் சாதல்.

நீசக் குயிலும் நெருப்புச் சுவைக்குரலில் 55
ஆசை ததும்பி அமுதூறப் பாடியதே:—
காட்டில் விலங்கறியும் கைக்குழந்தை தானறியும்
பாட்டின் சுவையதனைப் பாம்பறியும் என்றுரைப்பார்;
வற்றல் குரங்கு மதிமயங்கிக் கள்ளினிலே
முற்றும் வெறிபோல் முழுவெறிகொண்(டு) ஆங்ஙனே, 60
தாவிக் குதிப்பதுவும் தாளங்கள் போடுவதும்,
'ஆவி யுருகுதடி, ஆகாகா!' என்பதுவும்,
கண்ணைச் சிமிட்டுவதும், காலாலும் கையாலும்
மண்ணைப் பிறாண்டியெங்கும் வாரி யிறைப்பதுவும்,
ஆசைக் குயிலே! அரும்பொருளே! தெய்வதமே! 65
பேச முடியாப் பெருங்காதல் கொண்டுவிட்டேன்;
காதலில்லை யானால் கணத்திலே சாதலென்றாய்;
காதலினால் சாகும் கதியினிலே என்னைவைத்தாய்;
எப்பொழுதும் நின்னை இனிப்பிரிவ(து) ஆற்றகிலேன்;
இப்பொழுதே நின்னை முத்த மிட்டுக் களியுறுவேன்." 70
என்றுபல பேசுவதும் என்னுயிரைப் புண்செயவே,
கொன்றுவிட எண்ணிக் குரங்கின்மேல் வீசினேன்
கைவாளை யாங்கே; கனவோ? நனவுகொலோ?
தெய்வ வலியோ? சிறுகுரங்(கு)என் வாளுக்குத்

தப்பி முகஞ்சுளித்துத் தாவி யொளித்திடவும், 75
ஒப்பிலா மாயத்(து) ஒருகுயிலும் தான்மறையச்
சோலைப் பறவை தொகைதொகையாத் தாமொலிக்க
மேலைச் செயலறியா வெள்ளறிவிற் பேதையேன்
தட்டித் தடுமாறிச் சார்பனைத்தும் தேடியுமே
குட்டிப் பிசாசக் குயிலையெங்கும் காணவில்லை. 80

## 6. இருளும் ஒளியும்

வான நடுவிலே மாட்சியுற ஞாயிறுதான்
மோனவொளி சூழ்ந்திடவும் மொய்ம்பிற் கொலுவிருந்தான்;
மெய்யெல்லாம் சோர்வு விழியில் மயக்கமுற
உய்யும் வழியுணரா(து) உள்ளம் பதைபதைக்க
நாணும் துயரும் நலிவுறுத்த, நான்மீண்டு 5
பேணுமனை வந்தேன், பிரக்கினைபோய் வீழ்ந்துவிட்டேன்;
மாலையிலே மூர்ச்சைநிலை மாறித் தெளிவடைந்தேன்;
நாலு புறமுமெனை நண்பர்வந்து சூழ்ந்துநின்றார்;
“ஏனடா மூர்ச்சையுற்றாய்? எங்குற்றாய்? ஏதுசெய்தாய்?
வானம் வெளிறுமுன்னே வைகறையிலேதனித்துச் 10
சென்றனை என்கின்றார் அச் செய்தியென்னே? ஊணின்றி
நின்றதென்னே?” என்று நெரித்துவிட்டார் கேள்விகளை;
இன்னார்க்(கு) இதுசொல்வ(து) என்று தெரியாமல்,
“என்னால் பலவுரைத்தல் இப்பொழுது கூடாதாம்;
நாளை வருவீரேல் நடந்ததெலாம் சொல்வேன் இவ் 15
வேளை எனைத்தனியே விட்டகல்வீர்” என்றுரைத்தேன்;
நண்பரெல்லாம் சென்றுவிட்டார்; நைந்துநின்ற தாயார்தாம்
உண்பதற்குப் பண்டம் உதவிநல்ல பால்கொணர்ந்தார்;
சற்று விடாய்தீர்ந்து தனியே படுத்திருந்தேன்;
முற்றும் மறந்து முழுத்துயிலில் ஆழ்ந்துவிட்டேன். 20
பண்டு நடந்ததனைப் பாடுகின்ற இப்பொழுதும்
மண்டு துயரெனது மார்பையெலாங் கவ்வுவதே!
ஓடித் தவறி உடைவனவாம் சொற்களெலாம்;
கூடி மதியிற் குவிந்திடுமாம் செய்தியெலாம்;
நாசக் கதையை நடுவே நிறுத்திவிட்டுப் 25

பேசும் இடைப்பொருளின் பின்னே மதிபோக்கிக்
கற்பனையும் வர்ணனையும் காட்டிக் கதைவளர்க்கும்
விற்பனர்தம் செய்கை விதமும் தெரிகிலன்யான்;
மேலைக் கதையுரைக்க வெள்கிக் குலையுமனம்;
காலைக் கதிரழகின் கற்பனைகள் பாடுகிறேன்; 30
தங்கம் உருக்கித் தழல்குறைத்துத் தேனாக்கி;
எங்கும் பரப்பியதோர் இங்கிதமோ? வான்வெளியைச்
சோதி கவர்ந்து சுடர்மயமாம் விந்தையினை
ஓதிப் புகழ்வார் உவமையொன்று காண்பாரோ?
கண்ணையினி(து) என்றுரைப்பக், கண்ணுக்குக் கண்ணாகி 35
விண்ணை அளக்குமொளி மேம்படுமோர் இன்பமன்றோ?
மூலத் தனிப்பொருளை மோனத்தே சிந்தைசெய்யும்
மேலவரும் அஃதோர் விரியுமொளி என்பாரேல்,
நல்லொளிக்கு வேறுபொருள் ஞாலமிசை ஒப்புளதோ?
புல்லை நகையுறுத்திப் பூவை வியப்பாக்கி 40
மண்ணைத் தெளிவாக்கி, நீரில் மலர்ச்சிதந்து
விண்ணை வெளியாக்கி, விந்தைசெயும் சோதியினைக்
காலைப் பொழுதினிலே கண்விழித்து நான்தொழுதேன்;
நாலு புறத்துமுயிர் நாதங்கள் ஓங்கிடவும்
இன்பக் களியில் இயங்கும் புவிகண்டேன் 45
துன்பக் கதையின் தொடருரைப்பேன், கேளீரோ!

## 7. குயிலும் மாடும்

காலைத் துயிலெழுந்து காலிரண்டும் முன்போலே
சோலைக்(கு) இழுத்திட நான் சொந்தவுணர் வில்லாமே
சோலையினில் வந்துநின்று சுற்றுமுற்றுந் தேடினேன்;
கோலப் பறவைகளின் கூட்டமெல்லாம் காணவில்லை;
மூலையிலோர் மாமரத்தின் மோட்டுக் கிளையினிலே 5
நீலக் குயிலிருந்து நீண்டகதை சொல்லுவதும்
கீழே யிருந்தோர் கிழக்காளை மா(டு) அதனை
ஆழ மதியுடனே ஆவலுறக் கேட்பதுவும்
கண்டேன் வெகுண்டேன் கலக்கமுற்றேன் நெஞ்சிலனல்
கொண்டேன் குமைந்தேன் குமுறினேன் மெய்வெயர்த்
[தேன்; 10

கொல்லவாள் வீசல் குறித்தேன்; இப் பொய்ப்பறவை
சொல்லுமொழி கேட்டதன்பின் கொல்லுதலே சூழ்ச்சியென
முன்போல் மறைந்து நின்றேன்; மோகப் பழங்கதையைப்
பொன்போல் குரலும் புதுமின்போல் வார்த்தைகளும்
கொண்டு குயிலாங்கே கூறுவதாம்; "நந்தியே! 15
பெண்டிர் மனத்தைப் பிடித்திழுக்கும் காந்தமே!
காமனே! மாடாகக் காட்சிதரும் மூர்த்தியே!
பூமியிலே மாடுபோல் பொற்புடைய சாதியுண்டோ ?
மானிடரும் தம்முள் வலிமிகுந்த மைந்தர்தமை
மேனியுறும் காளையென்று மேம்பாடுறப்புகழ்வார். 20
காளையர்தம் முள்ளே கனமிகுந்தீர், ஆரியரே!
நீள முகமும் நிமிர்ந்திருக்கும் கொம்புகளும்
பஞ்சுப் பொதிபோல் படர்ந்த திருவடிவும்
மிஞ்சுப் புறச்சுமையும் வீரத் திருவாலும்
வானத்(து) இடிபோல 'மா' வென்(று) உறுமுவதும் 25
ஈனப் பறவை முதுகின்மிசை ஏறிவிட்டால்
வாலைக் குழைத்து வளைத்தடிக்கும் நேர்மையும்பல்
காலம்நான் கண்டு கடுமோகம் எய்திவிட்டேன்;
பார வடிவும் பயிலும் உடல்வலியும்
தீர நடையும் சிறப்புமே இல்லாத 30
சல்லித் துளிப்பறவைச் சாதியிலே நான்பிறந்தேன்.
அல்லும் பகலும்நிதம் அற்ப வயிற்றினுக்கே
காடெல்லாம் சுற்றிவந்து, காற்றிலே எற்றுண்டு,
மூட மனிதர் முடைவயிற்றுக்(கு) ஓர்உணவாம்
சின்னக் குயிலின் சிறுகுலத்தி லேதோன்றி 35
என்னபயன் பெற்றேன்? எனைப்போலோர் பாவியுண்டோ?
சேற்றிலே தாமரையும் சீழுடைய மீன்வயிற்றில்
போற்றும் ஒளிமுத்தும் புறப்படுதல் கேட்டிலிரோ ?
நீசப் பிறப்பொருவர் நெஞ்சிலே தோன்றிவரும்
ஆசை தடுக்கவல்ல தாகுமோ? காமனுக்கே 40
சாதி பிறப்புத் தராதரங்கள் தோன்றிடுமோ ?
வாதித்துப் பேச்சை வளர்த்தோர் பயனுமில்லை;
மூட மதியாலோ முன்னைத் தவத்தாலோ
ஆடவர்தம் முள்ளே அடியாள் உமைத்தெரிந்தேன்,

மானுடராம் பேய்கள் வயிற்றுக்குச் சோறிடவும் 45
கூனர்தமை ஊர்களிலே கொண்டு விடுவதற்கும்
தெய்வமென நீருதவி செய்தபின்னர் மேனிவிடாய்
எய்தி யிருக்கும் இடையினிலே பாவியேன்
வந்துமது காதில் மதுரவிசை பாடுவேன்;
வந்து முதுகில் ஒதுங்கிப் படுத்திருப்பேன்; 50
வாலில் அடிபட்டு மனமகிழ்வேன்; 'மா'வென்றே
ஓலிடு நும் பேரொலியோ(டு) ஒன்றுபடக் கத்துவேன்
மேனியிலே உண்ணிகளை மேவாது கொன்றிடுவேன்
கானிடையே சுற்றிக் கழனியெலாம் மேய்ந்துநீர்
மிக்கவுண வுண்டுவாய் மென்றசைதான் போடுகையில் 55
பக்கத் திருந்து பலகதைகள் சொல்லிடுவேன்;
காளை எருதரே! காட்டிலுயர் வீரரே!
தாளைச் சரணடைந்தேன், தையலெனைக் காத்தருள்வீர்;
காதலுற்று வாடுகின்றேன்; காதலுற்ற செய்தியினை
மாதர் உரைத்தல் வழக்கமில்லை என்றறிவேன்; 60
ஆனாலும் என்போல் அபூர்வமாங் காதல்கொண்டால்
தானா உரைத்தலன்றிச் சாரும் வழியுளதோ ?
ஒத்த குலத்தவர்பால் உண்டாகும் வெட்கமெலாம்
இத்தரையில் மேலோர்முன் ஏழையர்க்கு நாணமுண்டோ ?
தேவர்முன்னே அன்புரைக்கச் சிந்தைவெட்கம் கொள்வ
[துண்டோ? 65
காவலர்க்குத் தங்குறைகள் காட்டாரோ? கீழடியார்;
ஆசைதான் வெட்கம் அறியுமோ?'' என்றுபல
நேசவுரை கூறி நெடிதுயிர்த்துப் பொய்க்குயிலி
பண்டுபோ லேதனது பாழடைந்த பொய்ப்பாட்டை
எண்டிசையும் இன்பக் களியேறப் பாடியதே. 70

காதல் காதல் காதல்;
காதல் போயிற் காதல் போயிற்
சாதல் சாதல் சாதல்.

முதலியன (குயிலின் பாட்டு)

பாட்டு முடியும்வரை பாரறியேன், விண்ணறியேன்;
கோட்டுப் பெருமரங்கள் கூடிநின்ற காவறியேன்!

தன்னை யறியேன், தனைப்போல் எருதறியேன்
பொன்னை நிகர்த்தகுரல் பொங்கிவரும் இன்பமொன்றே
கண்டேன், படைப்புக் கடவுளே! நான்முகனே! 75
பண்டே உலகு படைத்தனை நீ என்கின்றார்.
நீரைப் படைத்து நிலத்தைத் திரட்டிவைத்தாய்,
நீரைப் பழைய நெருப்பிற் குளிர்வித்தாய்,
காற்றைமுன்னே ஊதினாய், காணரிய வானவெளி
தோற்றுவித்தாய், நின்றன் தொழில்வலிமை
[யாரறிவார்? 80
உள்ளந்தான் கவ்வ ஒருசிறிதும் கூடாத
கொள்ளைப் பெரியவுருக் கொண்ட பலகோடி
வட்ட உருளைகள்போல் வானத்தில் அண்டங்கள்
எட்ட நிரப்பியவை எப்போதும் ஓட்டுகின்றாய்;
எல்லாம் அசைவில் இருப்பதற்கே சத்திகளைப் 85
பொல்லாப் பிரமா, புகுத்துவிட்டாய், அம்மாவோ!
காலம் படைத்தாய், கடப்பதிலாத் திக்கமைத்தாய்,
ஞாலம் பலவினிலும் நாடோறும் தாம்பிறந்து
தோன்றி மறையும் தொடர்ப்பாய் பலஅனந்தம்;
சான்ற உயிர்கள் சமைத்துவிட்டாய் நான்முகனே! 90
சால மிகப்பெரிய சாதனைகாண் இஃதெல்லாம்;
தாலமிசை நின்றன் சமர்த்துரைக்க வல்லார்யார்?
ஆனாலும் நின்றன் அதிசயங்கள் யாவினுமே
கானாமுதம்படைத்த காட்சிமிக விந்தையடா!
காட்டுநெடு வானம், கடலெல்லாம் விந்தையெனில் 95
பாட்டினைப்போல் ஆச்சரியம் பாரின்மிசை இல்லையடா!
பூதங்கள் ஒத்துப் புதுமைதரல் விந்தையெனில்
நாதங்கள் சேரும் நயத்தினுக்கு நேராமோ?
ஆசைதரும் கோடி அதிசயங்கள் கண்டதிலே
ஓசைதரும் இன்பம் உவமையிலா இன்பமன்றோ! 100
செத்தைக் குயில்புரிந்த தெய்விகத்தீம் பாட்டெனும் ஓர்
வித்தை முடிந்தவுடன் மீட்டுமறி(வு) எய்தியநான்
கையினில் வாளெடுத்துக் காளையின்மேல் வீசினேன்;
மெய்யில் படுமுன்னே விரைந்(து) அதுதான் ஓடிவிட,
வன்னக் குயில்மறைய, மற்றைப் பறவையெலாம் 105

முன்னைப்போற் கொம்பு முனைகளிலே வந்தொலிக்க,
நாணமில்லாக் காதல்கொண்ட நானும் சிறுகுயிலை
வீணிலே தேடியபின் வீடுவந்து சேர்ந்துவிட்டேன்.
எண்ணியெண்ணிப் பார்த்தேன் எதுவும் விளங்கவில்லை;
கண்ணிலே நீர்ததும்பக் கானக் குயிலெனக்கே 110
காதற் கதையுரைத்து நெஞ்சம் கரைத்ததையும்,
பேதைநான் அங்குப் பெரியமயல் கொண்டதையும்,
இன்பக் கதையின் இடையே தடையாகப்
புன்பறவை யெல்லாம் புகுந்த வியல்பினையும்,
ஒன்றைப் பொருள்செய்யா உள்ளத்தைக் காமவனல் 115
தின்றெனது சித்தம் திகைப்புறவே செய்ததையும்,
சொற்றைக் குரங்கும் தொழுமாடும் வந்தெனக்கு
முற்றும் வயிரிகளா மூண்ட கொடுமையையும்,
இத்தனைகோ லத்தினுக்கும் யான்வேட்கை தீராமல்
பித்தம் பிடித்த பெரிய கொடுமையையும் 120
எண்ணியெண்ணிப் பார்த்தேன் எதுவும் விளங்கவில்லை;
கண்ணிரண்டும் மூடக் கடுந்துயிலில் ஆழ்ந்துவிட்டேன்.

## 8. நான்காம் நாள்

நான்காம்நாள் என்னை நயவஞ்சனைபுரிந்து
வான்காதல் காட்டி மயக்கிச் சதிசெய்த
பொய்மைக் குயிலென்னைப் போந்திடவே கூறியநாள்
மெய்மை அறிவிழந்தேன், வீட்டிலே மாடமிசை
சித்தந் திகைப்புற்றோர் செய்கை யறியாமல் 5
எத்துங் குயிலென்னை எய்துவித்த தாழ்ச்சியெலாம்
மீட்டும் நினைத்தங்கு வீற்றிருக்கும் போழ்தினிலே,
காட்டுத் திசையினில்என் கண்ணிரண்டும் நாடியவால்
வானத்தே ஆங்கோர் கரும்பறவை வந்திடவும்
யானதனைக் கண்டே, 'இது நமது பொய்க்குயிலோ?' 10
என்று திகைத்தேன், இருந்தொலைக்கே நின்றதனால்
நன்று வடிவம் துலங்கவில்லை; நாடுமனம்
ஆங்கதனை விட்டுப் பிரிவதற்கும் ஆகவில்லை;
ஓங்கும் திகைப்பில் உயர்மாடம் விட்டுநான்

வீதியிலே வந்துநின்றேன்; மேற்றிசையில் அவ்வுருவம் 15
சோதிக் கடலிலே தோன்றுகரும் புள்ளியெனக்
காணுதலும் சற்றே கடுகி யருகேபோய்,
'நாணமிலாப் பொய்க்குயிலோ' என்பதனை நன்கறிவோம்
என்ற கருத்துடனே யான்விரைந்து சென்றிடுங்கால்
நின்ற பறவையுந்தான் நேராகப் போயினதால்; 20
யான்நின்றால் தான்நிற்கும், யான்சென்றால் தான்செல்லும் ;
மேனிநன்கு தோன்ற அருகினிலே மேவாது;
வானில் அதுதான் வழிகாட்டிச் சென்றிடவும்
யான்நிலத்தே சென்றேன்; இறுதியிலே முன்புநாம்
கூறியுள்ள மாஞ்சோலை தன்னைக் குறுகியந்த 25
ஊறிலாப் புள்ளும்அதன் உள்ளே மறைந்ததுவால்;
மாஞ்சோலைக் குள்ளே மதியிலிநான் சென்றாங்கே
ஆஞ்சோதி வெள்ளம் அலையுமொரு கொம்பரின்மேல்
சின்னக் கருங்குயிலி செவ்வனே வீற்றிருந்து
பொன்னங் குழலின் புதிய ஒலிதனிலே 30
பண்டைப்பொய்க் காதல் பழம்பாட்டைத் தான்பாடிக்
கொண்டிருத்தல் கண்டேன், குமைந்தேன்; எதிரேபோய்,
"நீசக் குயிலே நிலையறியாப் பொய்ம்மையே,
ஆசைக் குரங்கினையும் அன்பார் எருதினையும்
எண்ணிநீ பாடும் இழிந்த புலைப்பாட்டை 35
நண்ணியிங்கு கேட்க நடத்திவந்தாய் போலுமெனை"
என்று சினம்பெருகி ஏதேதோ சொல்லுரைத்தேன்;
கொன்றுவிட நெஞ்சிற் குறித்தேன்; மறுபடியும்
நெஞ்சம் இளகி நிறுத்திவிட்டேன்; அங்கிதற்குள்,
வஞ்சக் குயிலி மனத்தை இரும்பாக்கிக் 40
கண்ணிலே பொய்ந்நீர் கடகடெனத் தானூற்றப்
பண்ணிசைபோல் இன்குரலால் பாவியது கூறிடுமால்:
ஐயனே, என்னுயிரின் ஆசையே, ஏழையெனை
வையமிசை வைக்கத் திருவுளமோ ? மற்(று) எனையே
கொன்றுவிடச் சித்தமோ? கூறீர் ஒருமொழியில்! 45
அன்றில் சிறுபறவை ஆண்பிரிய வாழாது;
ஞாயிறுதான் வெம்மைசெயில் நாண்மலர்க்கு வாழ்வுளதோ?
தாயிருந்து கொன்றால் சரண்மதலைக்(கு) ஒன்றுளதோ?

தேவர் சினந்துவிட்டால் சிற்றுயிர்கள் என்னாகும்?
ஆவற் பொருளே! அரசே!என் ஆரியரே! 50
சிந்தையில்நீர் என்மேற் சினங்கொண்டால் மாய்ந்திடுவேன்
வெந்தழலில் வீழ்வேன், விலங்குகளின் வாய்ப்படுவேன்,
குற்றம்நீர் என்மேற் கொணர்ந்ததனை யானறிவேன்
குற்றம்நுமைக் கூறுகிலேன், குற்றமிலேன் யானம்ம!
புன்மைக் குரங்கைப் பொதிமாட்டை நான்கண்டு 55
மென்மையுறக் காதல் விளையாடி னேன்என்றீர்;
என்சொல்கேன்! எங்ஙனுய்வேன்! ஏதுசெய்கேன், ஐயனே!
நின்சொல் மறுக்க நெறியில்லை, ஆயிடினும்
என்மேல் பிழையில்லை, யாரிதனை நம்பிடுவார்?
நின்மேல் சுவைமுழுதும் நேராகப் போட்டுவிட்டேன் 60
வெவ்விதியே! நீ என்னை மேம்பா(டு) உறச்செய்து
செவ்விதின் ஈங்(கு) என்னைஎன்றன் வேந்தனொடு சேர்த்திடினும்,
அல்லா(து)என்வார்த்தை அவர்சிறிதும் நம்பாமே
புல்லாக எண்ணிப் புறக்கணித்துப் போய்விட, நான்
அக்கணத்தே தீயில் அழிந்துவிழ நேர்ந்திடினும், 65
எக்கதிக்கும் ஆளாவேன், என்செய்கேன்? வெவ்விதியே!

## 9. குயில் தனது முன்பிறப்பின் கதையை மொழிதல்

''தேவனே! என்னருமைச் செல்வமே! என்னுயிரே!
போவதன் முன்னொன்று புகல்வதனைக் கேட்டருள்வீர்!
முன்னம் ஒருநாள் முடிநீள் பொதியமலை
தன்னருகே நானும் தனியேஓர் சோலைதனில்
மாங்கிளையில் ஏதோ மனதிலெண்ணி வீற்றிருந்தேன் 5
ஆங்குவந்தார் ஓர்முனிவர்; ஆரோ பெரியரென்று
பாதத்தில் வீழ்ந்து பரவினேன்; ஐயர்எனை
ஆதரித்து வாழ்த்தி யருளினார்; மற்றதன்பின்,
'வேத முனிவரே! மேதினியில் கீழ்ப்பறவைச்
சாதியிலே நான்பிறந்தேன்; சாதிக் குயில்களைப்போல் 10

இல்லாமல் என்றன் இயற்கை பிறிதாகி,
எல்லார் மொழியும் எனக்கு விளங்குவதேன்?
மானுடர்போல் சித்தநிலை வாய்த்திருக்கும் செய்தியேன்?
யானுணரச் சொல்வீர்' எனவணங்கிக் கேட்கையிலே,
கூறுகின்றார் ஐயர் : 'குயிலே! கேள், முற்பிறப்பில் 15
வீறுடைய வெந்தொழிலார் வேடர் குலத்தலைவன்
வீர முருகனெனும் வேடன் மகளாகச்
சேர வளநாட்டில் தென்புறத்தே ஓர்மலையில்
வந்து பிறந்து வளர்ந்தாய்நீ; நல்லிளமை
முந்தும் அழகினிலே மூன்றுதமிழ் நாட்டில் 20
யாரும் நினக்கோர் இணையில்லை என்றிடவே
சீருயர நின்றாய்; செழுங்கான வேடரில்உன்
மாமன் மகனொருவன், மாடன்எனும் பேர்கொண்டான்,
காமன் கணைக்(கு) இரையாய் நின்னழகைக் கண்டுருகி,
நின்னை மணக்க நெடுநாள் விரும்பி, அவன் 25
பொன்னை மலரைப் புதுத்தேனைக் கொண்(டு) உனக்கு
நித்தம் கொடுத்து, நினைவெல்லாம் நீயாகச்
சித்தம் வருந்துகையில், தேமொழியே! நீயவனை
மாலையிட வாக்களித்தாய்; மையலினால் இல்லை; அவன்
சால வருந்தல் சகிக்காமல் சொல்லிவிட்டாய்; 30
ஆயிடையே நின்றன் அழகின் பெருங்கீர்த்தி
தேயமெங்கும் தான்பரவத் தென்மலையின் சார்பினில்ஓர்
வேடர்கோன், செல்வமும்நல் வீரமுமே தானுடையான்,
நாடனைத்தும் அஞ்சி நடுங்கும் செயலுடையான்,
மொட்டைப் புலியனுந்தன் மூத்த மகனான 35
நெட்டைக் குரங்கனுக்கு நேரான பெண்வேண்டி,
நின்னை மணம்புரிய நிச்சயித்து, நின்னப்பன்
தன்னையணுகி, "நின்றோர் தையலையென் பிள்ளைக்குக்
கன்னாலஞ் செய்யும் கருத்துடையேன்" என்றிடலும்,
எண்ணாப் பெருமகிழ்ச்சி எய்தியே, நின்தந்தை 40
ஆங்கே உடம்பட்டான்; ஆறிரண்டு நாட்களிலே
பாங்கா மணம்புரியத் தாமுறுதி பண்ணிவிட்டார்;
பன்னிரண்டு நாட்களிலே பாவையுனைத் தென்மலையில்
அன்னியன்கொண்(டு) ஏகிடுவான் என்னும் அதுகேட்டு,

மாடன் மனம்புகைந்து மற்றைநாள் உன்னைவந்து 45
நாடிச் சினத்துடனே நாலுமொழி கூற
நீயும் அவனிடத்தே நீண்ட கருணையினால்,
"காயும் சினந்தவிர்ப்பாய், மாடா! கடுமையினால்
நெட்டைக் குரங்கனுக்குப் பெண்டாக நேர்ந்தாலும்,
கட்டுப் படிஅவர்தம் காவலிற்போய் வாழ்ந்தாலும் 50
மாதம் ஒருமூன்றில் மருமம் சிலசெய்து
பேதம் விளைவித்துப் பின்னிங்கே வந்திடுவேன்;
தாலிதனை மீட்டும்அவர் தங்களிடமே கொடுத்து
நாலிரண்டு மாதத்தே நாயகனா நின்றனையே
பெற்றிடுவேன்; நின்னிடத்தே பேச்சுத் தவறுவனோ? 55
மற்றிதனை நம்பிடுவாய் மாடப்பா" என்றுரைத்தாய்;
காதலினால் இல்லை, கருணையினால் இஃதுரைத்தாய்;
மாதரசாய் வேடன் மகளான முற்பிறப்பில்
சின்னக் குயிலியென்று செப்பிடுவார் நின்நாமம்;
பின்னர்ச் சிலதினங்கள் சென்றதன்பின், பெண்குயிலி, 60
நின்னொத்த தோழியரும் நீயும்ஒரு மாலையிலே
மின்னற் கொடிகள் விளையாடுதல்போலே
காட்டி னிடையே களித்தாடி நிற்கையிலே,
வேட்டைக் கெனவந்தான் வெல்வேந்தன் சேரமான்
தன்னருமை மைந்தன்; தனியே, துணைபிரிந்து 65
மன்னவன்றன் மைந்தன் ஒரு மானைத் தொடர்ந்துவரத்
தோழியரும் நீயும் தொகுத்து நின்றாடுவதை
வாழியவன் கண்டுவிட்டான்; மையல் கரைகடந்து
நின்னைத் தனக்காக நிச்சயித்தான்; மாதுநீ
மன்னவனைக் கண்டவுடன் மாமோகங் கொண்டுவிட்டாய்; 70
நின்னையவன் நோக்கினான்; நீயவனை நோக்கிநின்றாய்;
அன்னதொரு நோக்கினிலே ஆவி கலந்துவிட்டீர்:
தோழியரும் வேந்தன் சுடர்க்கோலந் தான்கண்டே
ஆழியரசன் அரும்புதல்வன் போலும் என்றே
அஞ்சி மறைந்துவிட்டார்; ஆங்கவனும் நின்னிடத்தே, 75
'வஞ்சித் தலைவன் மகன்யான்' எனவுரைத்து,
"வேடர் தவமகளே, விந்தை யழகுடையாய்,
ஆடவனாத் தோன்றியதன் பயனை இன்றுபெற்றேன்;

கண்டதுமே நின்மிசைநான் காதல்கொண்டேன்''
[என்றிசைக்க,
மண்டு பெருங்காதல் மனத்தடக்கி நீமொழிவாய்: 80
''ஐயனே! உங்கள் அரண்மனையில் ஐந்நூறு
தையலருண் டாம்; அழகில் தன்னிகரில் லாதவராம்;
கல்வி தெரிந்தவராம்; கல்லுருகப் பாடுவராம்;
அன்னவரைச் சேர்ந்தேநீர் அன்புடனே வாழ்ந்திருப்பீர்;
மன்னவரை வேண்டேன் மலைக்குறவர் தம்மகள்யான்; 85
கொல்லும் அடற்சிங்கம் குழிமுயலை வேட்பதுண்டோ ?
வெல்லுதிறல் மாவேந்தர் வேடருள்ளோ பெண்ணெடுப்பார்?
பத்தினியா வாழ்வ(து) அல்லால் பார்வேந்தர் தாமெனினும்
நத்தி விலைமகளா நாங்கள் குடி போவதில்லை;
பொன்னடியைப் போற்றுகின்றேன், போய்வருவீர்;
[தோழியரும் 90
என்னைவிட்டுப் போயினரே, என்செய்கேன்?'' என்றுநீ
நெஞ்சம் கலக்கமெய்தி நிற்கையிலே, வேந்தன்மகன்
மிஞ்சுநின்றன் காதல் விழிக்குறிப்பி னாலறிந்தே
பக்கத்தில் வந்து பளிச்சென்(று) உனதுகன்னம்
செக்கச் சிவக்க முத்தமிட்டான்; சினங்காட்டி 95
நீவிலகிச் சென்றாய்; 'நெறியேது காமியர்க்கே?'
தாவி நினைவந்து தழுவினான் மார்பிறுக;
''நின்னையன்றி ஓர்பெண் நிலத்திலுண்டோ? என்றனுக்கே
பொன்னே, ஒளிர்மணியே, புத்தமுதே, இன்பமே,
நீயே மனையாட்டி, நீயே அரசாணி, 100
நீயே துணையெனக்கு, நீயே குலதெய்வம்;
நின்னையன்றிப் பெண்ணை நினைப்பேனோ? வீணிலே
என்னைநீ ஐயுறுதல் ஏதுக்காம்? இப்பொழுதே
நின்மனைக்குச் சென்றிடுவோம், நின்வீட்டில் உள்ளோர்பால்
என்மனத்தைச் சொல்வேன், எனது நிலையுரைப்பேன், 105
வேத நெறியால் விவாகம்உனைச் செய்துகொள்வேன்,
மாதரசே!' என்று வலக்கைதட்டி வாக்களித்தான்;
பூரிப்புக் கொண்டாய், புளகம்நீ எய்திவிட்டாய்;
வாரிப் பெருந்திரைபோல் வந்த மகிழ்ச்சியிலே
நாணம் தவிர்ந்தாய்; நனவே தவிர்ந்தவளாய், 110

காணத் தெவிட்டாததோர் இன்பக் கனவினிலே
சேர்ந்துவிட்டாய்; மன்னவன்றன் திண்டோளை நீயுவகை
ஆர்ந்து தழுவி அவனிதழில் தேன்பருகச்
சிந்தைகொண்டாய்; வேந்தன்மகன், தேனில்விழும் [வண்டினைப் போல்
விந்தையுறு காந்தமிசை வீழும் இரும்பினைப்போல் 115
ஆவலுடன் நின்னைத் தழுவியே, ஆங்குனது
கோவை யிதழ்பருகிக் கொண்டிருக்கும் வேளையிலே,
சற்றுமுன்னே ஊரினின்று தான்வந் திறங்கியவன்,
மற்றுநீ வீட்டைவிட்டு மாதருடன் காட்டினிலே
கூத்தினுக்குச் சென்றதனைக் கேட்டுக் குதூகலமாய் 120
ஆத்திரந்தான் மிஞ்சிநின்னை ஆங்கெய்திக் காணவந்தான்,
நெட்டைக் குரங்கன் நெருங்கிவந்து பார்த்துவிட்டான்;
"பட்டப் பகலிலே, பாவிமகள் செய்தியைப்பார்!
கண்ணாலங் கூட இன்னும் கட்டி முடியவில்லை;
மண்ணாக்கி விட்டாள்! என் மானம் தொலைத்துவிட்டாள்! 125
'நிச்சய தாம்பூலம்' நிலையா நடந்திருக்கப்
பிச்சைச் சிறுக்கிசெய்த பேதகத்தைப் பார்த்தாயோ!"
என்று மனதில் எழுகின்ற தீயுடனே
நின்று கலங்கினான் நெட்டைக் குரங்கனங்கே;
மாப்பிளைதான் ஊருக்கு வந்ததையும், பெண்குயிலி 130
தோப்பிலே தானுந்தன் தோழிகளுமாச்சென்று
பாடி விளையாடும் பண்புகேட் டேகுரங்கன்
ஓடி யிருப்பதோர் உண்மையையும் மாடனிடம்
யாரோ உரைத்துவிட்டார்; ஈரிரண்டு பாய்ச்சலிலே
நீரோடும் மேனி நெருப்போடுங் கண்ணுடனே 135
மாடன் அங்கு வந்து நின்றான் மற்(று) இதனைத் தேன்மலையின்
வேடர்கோன் மைந்தன் விழிகொண்டு பார்க்கவில்லை;
நெட்டைக் குரங்கன் அங்கு நீண்ட மரம்போலே
எட்டிநிற்குஞ் செய்தி இவன்பார்க்க நேரமில்லை;
அன்னியனைப் பெண்குயிலி ஆர்ந்திருக்கும் செய்தியொன்று 140
தன்னையே இவ்விருவர் தாங்கண்டார், வேறறியார்;
மாடனதைத் தான்கண்டான், மற்றவனும் அங்ஙனமே;

மாடன் வெறிகொண்டான், மற்றவனும் அவ்வாறே;
காவலன்றன் மைந்தனும்அக் கன்னிகையுந் தானும்அங்கு
தேவசுகம் கொண்டு விழியே திறக்கவில்லை; 145
ஆவிக் கலப்பின் அமுத சுகந்தனிலே
மேவியங்கு மூடி யிருந்த விழிநான்கு;
ஆங்கவற்றைக் கண்டமையால் ஆவியிலே தீப்பற்றி
ஓங்கும் பொறிகள் உதிர்க்கும் விழிநான்கு;
மாடனுந்தன் வாளுருவி மன்னவனைக் கொன்றிடவே 150
ஓடிவந்தான்; நெட்டைக் குரங்கனும்வாள் ஓங்கிவந்தான்;
வெட்டிரண்டு வீழ்ந்தனகாண் வேந்தன் முதுகினிலே;
சட்டெனவே மன்னவனும் தான்திரும்பி வாளுருவி
வீச்சிரண்டில் ஆங்கவரை வீழ்த்தினான்; வீழ்ந்தவர்தாம்
பேச்சிழந்தே அங்குப் பிணமாக் கிடந்துவிட்டார்; 155
மன்னவனும் சோர்வெய்தி மண்மேல் விழுந்துவிட்டான்
பின்னவனை நீயும் பெருந்துயர்கொண் டேமடியில்
வாரி எடுத்துவைத்து வாய்புலம்பக் கண்ணிரண்டும்
மாரி பொழிய மனமழிந்து நிற்கையிலே,
கண்ணை விழித்(து)உனது காவலனும் கூறுகின்றான்; 160
"பெண்ணே, இனிநான் பிழைத்திடேன்; சில்கணத்தே
ஆவி துறப்பேன், அழுதோர் பயனில்லை;
சாவிலே துன்பமில்லை; தையலே, இன்னமும்நாம்
பூமியிலே தோன்றிடுவோம்; பொன்னே! நினைக்கண்டு
காமுறுவேன்; நின்னைக் கலந்தினிது வாழ்ந்திடுவேன்; 165
இன்னும் பிறவியுண்டு; மாதரசே! இன்பமுண்டு;
நின்னுடனே வாழ்வன் இனி நேரும் பிறப்பினிலே"
என்றுசொல்லிக் கண்மூடி, இன்பமுறு புன்னகைதான்
நின்று முகத்தே நிலவுதர மாண்டனன்காண்;
மாடன் அங்குச் செய்ததோர் மாயத்தால் இப்பொழுது 170
பீடையுறு புள்வடிவம் பேதையுனக்(கு) எய்தியது;
வாழிநின் றன் மன்னவனும் தொண்டை வளநாட்டில்
ஆழிக் கரையின் அருகேயோர் பட்டினத்தில்
மானிடனாத் தோன்றி வளருகின்றான்; நின்னையொரு
கானிடத்தே காண்பான்; கனிந்துநீ பாடுதல்ல 175
பாட்டினைத்தான் கேட்பான்; பழவினையின் கட்டினால்

மீட்டுநின்மேல் காதல்கொள்வான், மென்குயிலே! என்றத் [தத்
தென்பொதியை மாமுனிவர் செப்பினார்; சாமீ!
குயிலுருவம் கொண்டேன்யான், கோமானோ மேன்மை
பயிலு மனிதவுருப் பற்றிநின்றான், எம்முள்ளே 180
காதலிசைந் தாலும் கடிமணந்தான் கூடாதாம்;
சாதற் பொழுதிலே தார்வேந்தன் கூறியசொல்
பொய்யாய் முடியாதோ? என்றிசைத்தேன், புன்னகையில்
ஐயர் உரைப்பார்:—'அடிபேதாய்! இப்பிறவி
தன்னிலும்நீ விந்தகிரிச் சார்பினிலோர் வேடனுக்குக் 185
கன்னியெனத் தான்பிறந்தாய் கர்ம வசத்தினால்,
மாடன் குரங்கன் இருவருமே வன்பேயாக்
காடுமலை சுற்றி வருகையிலே கண்டுகொண்டார்
தின்னையங்கே, இப்பிறப்பில் நீயும் பழமைபோல்
மன்னனையே சேர்வையென்று தாஞ்சூழ்ந்து மற்றவரும் 190
நின்னைக் குயிலாக்கி நீசெல்லும் திக்கிலெல்லாம்
நின்னுடனே சுற்றுகின்றார்; நீ இதனைத் தேர்கிலையோ?'
என்றார்; விதியே! இறந்தவர்தாம் வாழ்வாரை
நின்று துயருறுத்தல் நீதியோ பேய்களெனைப்
பேதைப் படுத்திப் பிறப்பை மறப்புறுத்தி 195
வாதைப்படுத்தி வருமாயில் யானெனது
காதலனைக் காணுங்கால், காய்சினத்தால் ஏதேனும்
தீதிழைத்தால் என்செய்வேன்? தேவரே! மற்றிதற்கோர்
மாற்றிலையோ? என்று மறுகிநான் கேட்கையிலே,
தேற்றமுறு மாமுனிவர் செப்புகின்றார்:—"பெண்குயிலே! 200
தொண்டைவள நாட்டிலோர் சோலையிலே வேந்தன்மகன்
கண்டுனது பாட்டில் கருத்திளகிக் காதல்கொண்டு
நேசம் மிகுதியுற்று நிற்கையிலே, பேயிரண்டும்
மோசம் மிகுந்த முழுமாயச் செய்கைபல
செய்துபல பொய்த்தோற்றம் காட்டித் திறல்வேந்தன் 205
ஐயமுறச் செய்துவிடும், ஆங்கவனும் நின்றனையே
வஞ்சகியென்(று) எண்ணி மதிமருண்டு நின்மீது
வெஞ்சினத்தான் எய்திநினை விட்டுவிட நிச்சயிப்பான்;
பிந்தி விளைவதெல்லாம் பின்னேநீ கண்டுகொள்வாய்;

சந்திசெபம் செய்யும் சமயமாய் விட்ட(து)என்றே 210
காற்றில் மறைந்துசென்றார் மாமுனிவர்; காதலரே!
மாற்றி உரைக்கவில்லை; மாமுனிவர் சொன்னதெல்லாம்
அப்படியே சொல்லிவிட்டேன்; ஐயோ! திருவுளத்தில்
எப்படிநீர் கொள்வீரோ? யானறியேன், ஆரியரே!
காதல் அருள்புரிவீர், காதலில்லை என்றிடிலோ, 215
சாதல் அருளித்தமது கையால் கொன்றிடுவீர்!''
என்று குயிலும் எனதுகையில் வீழ்ந்ததுகாண்;
கொன்றுவிட மனந்தான் கொள்ளுமோ? பெண்ணென்றால்
பேயும் இரங்காதோ? பேய்கள் இரக்கமின்றி
மாயமிழைத் தால்அதனை மானிடனும் கொள்ளுவதோ? 220
காதலிலே ஐயம் கலந்தாலும் நிற்பதுண்டோ?
மாதர்அன்பு கூறில் மனமிளகார் இங்குளரோ?
அன்புடனே யானும் அருங்குயிலைக் கைக்கொண்டு
முன்புவைத்து நோக்கியபின் மூண்டுவரும் இன்பவெறி
கொண்டதனை முத்தமிட்டேன்; கோகிலத்தைக் காணவில்லை; 225

விண்டுரைக்க மாட்டாத விந்தையடா! விந்தையடா!
ஆசைக்கடலின் அமுதடா! அற்புதத்தின்
தேசமடா! பெண்மைதான் தெய்விகமாம் காட்சியடா!
பெண்ணொருத்தி அங்குநின்றாள்; பேருவகை கொண்டுதான்
கண்ணெடுக்கா(து) என்னைக் கணப்பொழுது நோக்கினாள் 230

சற்றே தலைகுனிந்தாள் சாமீ! இவள்அழகை
எற்றே தமிழில் இசைத்திடுவேன்? கண்ணிரண்டும்
ஆளை விழுங்கும் அதிசயத்தைக் கூறுவனோ?
மீள விழியில் மிதந்த கவிதையெலாம்
சொல்லில் அகப்படுமோ? தூயசுடர் முத்தையொப்பாம் 235
பல்லில் கனியிதழில் பாய்ந்த நிலவினையான்
என்றும் மறத்தல் இயலுமோ? பாரின்மிசை
நின்றதொரு மின்கொடிபோல் நேர்ந்தமணிப் பெண்ணரசின்
மேனி நலத்தினையும் வெட்டினையும் கட்டினையும்
தேனில் இனியாள் திருந்த நிலையினையும் 240
மற்றவர்க்குச் சொல்ல வசமாமோ? ஓர்வார்த்தை

கற்றவர்க்குச் சொல்வேன்; கவிதைக் கனிபிழிந்த
சாற்றினிலே, பண்கூத்(து) எனுமிவற்றின் சாரமெலாம்
ஏற்றி அதனோடே இன்னமுதைத் தான்கலந்து,
காதல் வெயிலிலே காயவைத்த கட்டியினால் 245
மாதவளின் மேனி வகுத்தான் பிரமனென்பேன்;
பெண்ணவளைக் கண்டு பெருங்களிகொண்(டு) ஆங்ஙனே
நண்ணித் தழுவி நறுங்கள் ளிதழினையே
முத்தமிட்டு முத்தமிட்டு மோகப் பெருமயக்கில்
சித்தம் மயங்கிச் சிலபோழ்(து) இருந்தபின்னே, 250
பக்கத் திருந்தமணிப் பாவையுடன் சோலையெலாம்
ஒக்க மறைந்திடலும், ஓகோ! எனக்கதறி
வீழ்ந்தேன்; பிறகு விழிதிறந்து பார்க்கையிலே
சூழ்ந்திருக்கும் பண்டைச் சுவடி, எழுதுகோல்,
பத்திரிகைக் கூட்டம், பழம்பாய் வரிசையெல்லாம் 255
ஒத்திருக்க 'நாம்வீட்டில் உள்ளோம்' எனவுணர்ந்தேன்;
சோலை, குயில், காதல், சொன்னகதை யத்தனையும்
மாலை யழகின் மயக்கத்தால் உள்ளத்தே
தோன்றியதோர் கற்பனையின் சூழ்ச்சியென்றே கண்டு
[கொண்டேன்
ஆன்ற தமிழ்ப்புலவீர்! கற்பனையே யானாலும், 260
வேதாந்த மாக விரித்துப் பொருளுரைக்க
யாதானும் சற்றே இடமிருந்தால் கூறீரோ?

# குறிப்புரை

குயிற் பாட்டு - குயிலது பாட்டு - ஆறும் வேற்றுமைத் தொகை நிலைத்தொடர். குயிலைப்பற்றிய பாட்டு - இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை.

## 1. சோலைக்குயில்

(1 - 5) பரிதி - சூரியன், மோகனம் - மயக்கம், திரை - அலை.

(6 - 10) தென் புதுவை - அழகிய புதுச்சேரி என்னும் ஊர். புதுவை - புதுச்சேரி என்பதன் மரூஉ. நத்தம் - நகரைச் சார்ந்த சிற்றூர். அந்த மாஞ் சோலை-அந்த மாமரங்கள் நிறைந்த சோலை, அந்தம் ஆம் சோலை - அழகிய சோலை.

(11 - 15) விருந்து - புதுமை, பெட்பு - விருப்பம், புளகம் உற - மயிர்க்கூச்செறிய, உள்ளத்து அனல் - காமத்தீ.

(16- 20) வானத்து மோகினியாள்-தேவர் உலகத்துப்பெண். குயில் கூவிய ஓசையின்பம் - குயிலின் இசை வருணிக்கப் படுகிறது.

(21 - 25) விந்தை - வியக்கத்தக்க செயல், முன்னி - எண்ணி, நெட்டைக் கனவு - நீண்ட சொப்பனம், கன்னிக்குயில் - இளமைப் பருவமுடைய குயில், கா - சோலை.

(26 - 30) குயில் பேட்டை - பெண் குயிலை. களி - மகிழ்ச்சி. நாதக் கனல் - குயிலின் இசையாகிய நெருப்பு: உருவகம்.

(31 - 36) அமரர்-தேவர், மரித்தல் இல்லாதவர், தொக்க - பொதிந்த, அவனி - உலகம், உலக மக்களைக் குறித்தது: இடவாகு பெயர், மேதினியீர் - உலக மக்களே.

## 2. குயிலின் பாட்டு

எல்லை காணல்-முடிவைக் காண முயலுதல், நலிவு - குறைவு, சேதம் - அழிவு, கூளம் - குப்பை, பண் - இசை, புரை - குற்றம், உடைவு - தளர்ச்சி, இறுதி - அழிவு, வாடல் - வருந்துதல், விழல்- வீண்.

## 3. குயிலின் காதற் கதை

(1 - 5) மோகனப்பாட்டு - காதல் மயக்கம் தரும் குயிலின் பாட்டு, ஏக மவுனம் - ஓரே அமைதி, இணைந்தனவால் - இணைந்தன - சேர்ந்து காணப்பட்டன. ஆல் : அசை,

(6 - 10) பேடே - பெண்பறவையே, திரவியம் - செல்வம், பீழை - துயரம்.

(11 - 15) மாயச் சொல் - அறிவை மயக்கும் வார்த்தை - காதல் என்னும் சொல், தவித்தல் - வாடுதல், புள் - பறவை, மையல் - காம மயக்கம்.

(16 - 20) எய்துகிலா - அடையப் பெருத, நாண் - வெட்கம், கானக்குயிலி - சோலைக்குயில், மானக் குலைவு - வெட்கக் கேடு.

(21 - 25) அவனி - உலகம், சினம் - கோபம்.

(26 - 30) பேறு - திறமையாகிய செல்வம், நெஞ்ச வழக்கு-மன எண்ணம், கலகல - இரட்டைக்கிளவி.

(31 - 35) ஒலம் - சத்தம், ஊன் - உடம்பு: சினையாகு பெயர், தேன் வாரி - தேனுகிய வெள்ளம் - உருவகம், ஏற்ற நீர்ப் பாட்டு-ஏற்றம் இறைப்பவர் பாடும் இசைப் பாட்டு, 'ஏற்றப் பாட்டிற்கு எதிர்ப்பாட்டில்லை' என்பது பழமொழி.

(36 - 40) கோல்தொடியார் - திரண்ட வளையல்களையணிந்த பெண்கள், குக்குவென-பாடும் ஒலிக்குறிப்பு, சுண்ணம்-வாசனைப் பொடி, பண்ணை மடவார் - வயலில் வேலை செய்யும் பள்ளியர், கொட்டி-கைகளைக் கொட்டி, கும்மியடித்து. அமுதப்பாட்டு - தேவாமுதம் போன்ற இனிய பாடல்: உவமைத் தொகை.

(41 - 45) வேயின் குழல் - புல்லாங்குழல், நா - நாக்கு.

(46 - 50) நெடுநோக்கு - நீண்ட பார்வை, மஞ்சரே - 'ஐமந்தரே' என்பதன் போலி - வீரரே.

(51 - 55) போழ்து - 'பொழுது' என்பதன் மரூஉ, இன்பச் சுரம் - காதல் நோய்: உருவகம்.

(56 - 60) பல்லவி - இசைப் பாட்டின் முதல் உறுப்பு: அது திரும்பத் திரும்ப இசைப்பது, விள்ளா - பிளக்குமாறு, திகைப்பு-தடுமாற்றம்.

(61 - 65) நெடிது உயிர்த்து—பெருமூச்சு விட்டு, சோதித் திருவிழியீர்! - ஒளியும் அழகும் பொருந்திய கண்களையுடையவரே, நாவாய் - தோணி.

(66 - 70) அளவளாய் - கலந்துபழகி, பறி கொண்டு - பறித்துக் கொண்டு - கவர்ந்து, பறி - முதனிலைத் தொழிற் பெயர்.

(71 - 75) காதலர்க்குப் பிரிவு என்பது ஒரு நாள் ஒரு யுகமாக இருக்கும். கொடு - 'கொண்டு' என்பதன் தொகுத்தல் விகாரம். தேரு - தாங்க முடியாத.

## 4. காதல் வேதனை

(1 - 5) கனவு நனவு என்று அறியேன் - கனவோ நனவோ என்பதைத் தெரியேன், களி - பித்து, காமனார் - மன்மதன், கொம்புக் குயிலி - மரக்கொப்பில் இருந்த குயில்.

(6 - 10) போந்து - வந்து : 'புகுந்து' என்பதன் மரூஉ, தறி - நெசவுக் கருவி - கட்டுத்தறி.

(11 - 15) நீளச்சிலை-பெரிய வில், தீம்பாட்டு-இனிய பாடல், சாயை - நிழல், இந்திர மாசாலம் - மாய வித்தை.

(16 - 20) உட்கருவிகளாகிய மனம், புத்தி, சித்தம், அகங்காரம் - இவை அந்தக் கரணங்கள் எனப்படும்; சூத்திரம் - சூத்திரக் கயிறு - பொம்மையை ஆட்டுபவன் கையிற் பிடித்த கயிறு; கடுகவும் - வேகமாக, நீலி - நீலநிறமுடைய குயில்.

(21 - 27) செஞ்ஞாயிறு: (செம்மை + ஞாயிறு)- பண்புத்தொகை சூரியன்; ஈண்டும் - வந்து கூடும், கரை கடந்த - அளவுக்கு மிஞ்சிய, கோணம் - மூலை.

## 5. குயிலும் குரங்கும்

(1 - 5) சுற்று முற்றும் - பக்கமெல்லாம், தொல் விதி - பழமையான விதி.

(6 - 10) பித்தர் - காமப்பித்துப் பிடித்தவர், கேண்மின் கேளுங்கள்: ஏவற்பன்மை வினைமுற்று, பதைக்கும் - நடுங்கும்.

(11 - 15) விம்மி - பொருமி, இரங்கும் - வருந்தும்.

(16 - 20) சிந்த - கொன்றுவிட, ஒளிந்து - மறைந்து.

(21 - 25) வானரரே-குரங்காரே;வால் + நரர் = வானரர்; ஈடு அறியா - ஒப்பில்லாத, ஏந்தலே - தலைவரே, ஏந்தல் - ஆண்பால் சிறப்புப் பெயர்; மையல் - காதல் மயக்கம்.

(26 - 30) வகுத்தல் - அமைத்தல், வாயில் - வழி, விண்டு உரைக்கும்-வாய் திறந்து பேசும், குரங்கு கூனிக்குந்தியிருக்கும் இயல்புடையது.

(31 - 35) பட்டு மயிர்-பட்டுப்போன்ற மெல்லிய உரோமம்; உவமைத் தொகை; எட்டு உடை - எட்டு வகையான ஆடைகள்.

(36 - 40) நேர்வதற்கு - ஒப்பாவதற்கு, எத்தை - எதனை.

(41 - 45) ஈனம் - இழிவு - குற்றம், கச்சை - அரைக்கச்சை: ஆடவர் இடையில் கட்டுவது (Belt), பாகை - தலைப்பாகை, திருவால் - அழகிய வால்.

(46 - 50) போசனம் - உணவு, சாதுரியம் - திறமை, நேமத் தவம் - முறையாகச் செய்த தவம், நியமம் - நேமம் என்று ஆயிற்று.

(51 - 55) சீர்த்தி - சிறப்பு, ஆரியர் - சிறந்தவர், மைக்குயில் - கருநிறக் குயில், நீசக்குயில் - இழிந்த குணமுடைய குயில்.

(56 - 60) இசை இன்பம் இத்தகையதென விளக்கும் பகுதி. வற்றல் குரங்கு - உடல் மெலிந்த குரங்கு, வெறி - மயக்கம்.

(61 - 65) பிறாண்டி - காலாலும் கையாலும் தோண்டி, வாரி இறைத்தல் - அள்ளி வீசுதல்.

(66 - 70) கதி - நிலை, ஆற்றுகிலேன் - பொறுக்கமாட்டேன், களியுறுவேன் - இன்பம் அடைவேன்.

(71 - 75) புண் செய - வருத்த.

(76 - 80) மாயம் - வஞ்சகம், தொகை தொகையா-கூட்டம் கூட்டமாக, வெள்ளறிவு - அறியாமை.

## 6. இருளும் ஒளியும்

(1 - 5) ஞாயிறு - சூரியன், மோனம் - மௌனம் - அமைதி, மொய்ம்பு - வலி, உய்யும் வழி - தப்பும் வகை.

(6 - 10) பிரக்ஞை - உணர்ச்சி, மூர்ச்சை நிலை - மயக்கம், வெளிறும் முன் - வெளுக்கும் முன்னால், பொழுது விடியும் முன்பு, வைகறை; இரவின் கடைசிப் பகுதி - கடைச் சாமம்.

(11 - 15) நெரித்து விட்டார் - அடுக்கடுக்காகப் பல கேள்வி களைத் தொடர்ந்து கேட்டார்.

(16 - 20) அகல்வீர் - நீங்குவீர், நைந்து - மனம் வருந்தி, விடாய் - களைப்பு, முழுத்துயில் - ஆழ்ந்த உறக்கம்.

(21 - 25) மண்டு துயர் - மிக்க கவலை - வினைத்தொகை, உடை-வன - தடுமாறுகின்றன.

(26 - 30) விற்பனர் - அறிவுடையோர், வெள்கி - வெட்கப்பட்டு, காலைக் கதிர் - உதய சூரியன்.

(31 - 35) தழல் - நெருப்பு, இங்கிதம் - இன்பம்.

(36 - 40) விண்-ஆகாயம், மூலத்தனிப் பொருள்-இறைவன், மேலவர்-பெரியோர், விரியும் ஒளி-எங்கும் நிறைந்த பேரொளி, ஞாலம் - உலகம்.

(41 - 47) நகையுறுத்தி - அழகுபடுத்தி, மலர்ச்சி - புதிய அழகு, புவி - உலகம்.

## 7. குயிலும் மாடும்

(1 - 5) துயில் - உறக்கம், கோலம்-அழகு. மோட்டுக்கிளை - உச்சிக் கொப்பு.

(6 - 10) கிழக்காளை - வயது முதிர்ந்த காளைமாடு, ஆழமதி-மிக்க கவனம், வெகுண்டேன் - கோபம் கொண்டேன், குமைந்தேன் - சீறினேன்.

(11 - 15) சூழ்ச்சி - தக்க உபாயம், மோகப் பழங்கதை - காதல் கதை, நந்தி - காளை.

(16 - 20) காமன் - மன்மதன், மூர்த்தி - தெய்வ வடிவுடையான், பொற்பு - அழகு, மேனியுறும் காளை - உடல் கட்டுடைய காளை.

(21 - 25) கனம் மிகுந்தீர் - பெருமை மிகவும் உடையீர், பொதி - மூடை, வானத்து இடி - மேகத்தில் தோன்றும் இடி முழக்கம்,

(26 - 30) கடுமோகம் - மிக்க காதல், பார வடிவு - பெரிய தோற்றம், தீர நடை - கம்பீரமான நடை.

(31 - 35) சலித்துளிப் பறவை - மிகவும் இழிந்த பறவை, அல் - இரவு, எற்றுண்டு - தாக்கப்பெற்று, முடைவயிறு - நாற்றம் பிடித்த வயிறு.

(36 - 40) சீழ் - துர்நாற்றமுடைய இரத்தம், நீசப்பிறப்பு - இழிந்த பிறவி.

(41 - 45) தராதரம் - உயர்வு தாழ்வு, வாதித்து - வாக்கு வாதம் செய்து, அடியாள் - அடியவளாகிய நான்.

(46 - 50) கூனர் - கூன் விழுந்த கிழவர், மதுர இசை - இனிமையான சங்கீதம்,

(51 - 55) ஓலிடும் - சத்தமிடும்: கத்தும், உண்ணி - இரத்தத்தை உண்ணும் ஒரு வகைப் பூச்சி, மேவாது - பற்றுதவாறு, கான் - காடு, கழனி - வயல்.

(56 - 60) தாள் - பாதம், தையல் எனை - பெண்ணாகிய என்னை.

(61 - 65) சாரும் வழி - அடையும் வழி, மேலோர் - பிறப்பு, அறிவு முதலியவற்றால் மேம்பட்டோர்.

(66 - 70) காவலர் - அரசர், 'ஆசை வெட்கம் அறியாது' என்பது பழமொழி, நேச உரை - அன்பு வார்த்தை, நெடிது உயிர்த்து-பெருமூச்சு விட்டு. பாழ் அடைந்த - பாழாய்ப்போன - கேட்டுக்குக் காரணமான, இன்பக்களி - காம மயக்கம்.

(71 -75) பார் - உலகம், கோட்டுப் பெருமரம் - கொம்புகளையுடைய பெரிய மரம். கா - சோலை, நான்முகன் - பிரமன்.

(76 - 80) காணரிய - அளவு காண முடியாத: காண + அரிய=காணரிய - தொகுத்தல் விகாரம்.

(81 - 85) உருளை - உருண்டை, அண்டம் - உலகம்.

(86 - 90) ஞாலம் - உலகம், அனந்தம் - அளவில்லாதன, சமைத்துவிட்டாய் - படைத்தாய்.

(91 - 95) தாலம் - உலகம், கானமுதம் - கான + அமுதம் இசையமுது - தீர்க்கசந்தி.

(96 - 100) பூதங்கள் - நிலம், நீர், நெருப்பு, காற்று, வானம் ஆகிய ஐம்பெரும்பூதங்கள், நயம் - இனிமை.

(101 - 105) செத்தை - துன்பம். மீட்டும் - திரும்பவும்; வன்னக்குயில் - அழகிய குயிற் பறவை.

(106 - 110) கானக்குயில் - கானம் + குயில்-காட்டுக் குயில்; இசை பாடும் குயில்.

(111 - 115) கரைத்தது - உருகுமாறு செய்தது, மயல் காம மயக்கம், புள் பறவை - அற்பப்பறவை, காமவனல் காமத்தீ - உருவகம்.

(116 - 122) சொற்றை - பயனில்லாதது, வயிரிகள் - பகைவர்கள், வேட்கை - காம விருப்பம், கடுந்துயில் - ஆழ்ந்த உறக்கம்.

## 8. நான்காம் நாள்

(1 - 5) நயவஞ்சனை - தந்திரமாக ஏமாற்றுதல், வான்காதல் மிக்க விருப்பம் : உரிச்சொல் தொடர், சதி - சூழ்ச்சி, போந்திட வருமாறு, சித்தத் திகைப்பு - மனத்தடுமாற்றம்.

(6 - 10) எத்து குயில் - ஏமாற்றிய குயில், தாழ்ச்சி - அவமானம்.

(11-15) இருந்தொலை - நீண்ட தூரம் : இருமை + தொலை பண்புத்தொகை, துலங்கவில்லை - தெரியவில்லை, உயர்மாடம் -மேல் மாடி. மேற்றிசை - மேற்குத்திக்கு.

(16 - 20) கடுகி - விரைந்து சென்று.

(21 - 25) மேனி - உடல், மேவாது - வராது, குறுகி அடைந்து.

(26 - 30) ஊறு இலாப் புள் - கவலையில்லாத பறவை, மதியிலி - அறிவில்லாதவன், கொம்பர்-மரக்கொப்பு : 'கொம்பு' என்பதன் மொழியிறுதிப் போலி. செவ்வனே - நன்றாக, பொன்னங் குழலின் - பொன் போன்ற அழகிய புல்லாங் குழலின் இசை போல.

(31 - 35) குமைந்தேன் - மனம் கொதித்தேன், புலைப்பாட்டு- இழிவான பாட்டு.

(36 - 40) குறித்தேன் - நினைத்தேன், இளகி - இரக்கங் கொண்டு.

(41 - 45) பொய்ந்நீர் - பொய்யான கண்ணீர், கடகடெனா - விரைவாக: 'கடகட' - இரட்டைக் கிளவி, வையம் - உலகம், சித்தமோ - எண்ணமோ,

(46 - 50) அன்றில் - குருவியினத்தைச்சேர்ந்த சிறு பறவை: இவ்வினத்து ஆண் பெண் குருவிகள் ஒன்றைப் பிரிந்து மற்றொன்று வாழாது. நாண்மலர் - அன்று பூத்த பூ, சரண் - புகலி

டம், மதலை - குழந்தை, சிற்றுயிர் - சிறுமை + உயிர் : பண்புத் தொகை.

(51 - 55) வெந்தழல் - கொடிய நெருப்பு : வெம்மை + தழல் - பண்புத்தொகை, கூறுகிலேன் - தன்மை யொருமை எதிர்மறை வினை முற்று, பொதி மாடு - மூட்டை சுமக்கும் மாடு.

(56 - 60) உய்வேன் - பிழைப்பேன், சுமை - பாரம்.

(61 - 66) வெவ்விதியே-கொடிய ஊழ்வினையே: வெம்மை + விதி - பண்புத்தொகை, வேந்தன் - தலைவனாகிய அரசன், புல்லாக - அற்பமாக.

## 9. முன் பிறப்பின் கதை மொழிதல்

(1 - 5) புகல்வது - சொல்லுவது, முடிநீள் பொதிய மலை - உயர்ந்த சிகரத்தையுடைய பொதிய மலை.

(6 - 10) பரவினேன் - துதித்தேன், ஆதரித்து - விரும்பி, மேதினி - உலகம்.

(11 - 15) பிறிதாகி - வேறுபட்டு, சித்த நிலை - மன உணர்ச்சி, இது முதல் குயிலின் பழம் பிறப்பினை முனிவர் கூற்றாக அக் குயிலே கூறுகிறது.

(16 - 20) வீறு - பெருமிதம், கம்பீரம்; வெந்தொழிலார் - கொடிய வேட்டையாடும் தொழிலையுடைய வேடர்; முந்தும் அழகு - முதன்மையான அழகு; மூன்று தமிழ் நாடு - சேர சோழ பாண்டிய நாடுகள்.

(21 - 25) இணை - ஒப்பு; செழுங்கானம் - வளமான காடு: செழுமை + கானம் - பண்புத்தொகை; காமன் கணை - மன்மத பாணம், காமத்தை விளைப்பது.

(26 - 30) நித்தம் - நாள் தோறும், சித்தம் - மனம், தேமொழியே - தேன் போன்ற இனிய சொல்லையுடையாய், மாலையிட - மணமாலை சூட்ட, மையல் - காதல் மயக்கம், சால - மிகவும்-உரிச்சொல், சகிக்காமல் - பொறுக்க முடியாது.

(31 - 35) தேயம் எங்கும் - நாடு முழுதும், வேடர் கோன் - வேடர்கட்கு அரசன் - 'மொட்டைப் புலியன்' என்பான்.

(36 - 40) மொட்டைப் புலியனின் மூத்த மகன் நெட்டைக் குரங்கன். நேரான - பொருத்தமான, தையல் - பெண், கண்ணாலம் - கலியாணம், எண்ணாப் பெருமகிழ்ச்சி - அளவில்லாத இன்பம்.

(41 - 45) உடம்பட்டான் - சம்மதித்தான், ஆறிரண்டு - பன்னிரண்டு, பாங்கா - அழகாக, பாவை - பாவை போன்ற பெண்: உவமையாகு பெயர், அன்னியன் - அயலான், மனம் புகைந்து - உள்ளம் கொதித்து.

(46 - 50) நாலு மொழி - நான்கு விதமான சொற்கள், பல வார்த்தைகள், காயும் சினம் - வருத்துகின்ற கோபம், பெண்டு - மனைவி, கட்டுப்படி - உலக வழக்கப்படி.

(51 - 55) மருமம் - சூழ்ச்சி, பேதம் - பகை, நாலிரண்டு மாதம் - எட்டு மாதம்.

(56 - 60) குயிலின் முற்பிறப்பில் வேடன் மகளாகப் பிறந்திருந்தபோது 'சின்னக்குயிலி' என்பது அவள் பெயர்.

(61 - 65) மின்னற் கொடி - மின்னல் போன்ற ஒளியுடைய பூங்கொடி, வெல் வேந்தன் - பகைவரை வெல்லும் வல்லமை வாய்ந்த அரசன் : வினைத்தொகை.

(66 - 70) தொகுத்து நின்று - கூட்டமாகக் கூடி நின்று, வாழி-அசைச்சொல், கரை கடந்து-எல்லை மீறி, மாமோகம்-பெருங் காதல்.

(71 - 75) 'கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச் சொற்கள், என்ன பயனும் இல'—திருக்குறள் கருத்தை ஒப்பு நோக்குக: ஆவி கலந்து விட்டார் - ஈருடல் ஓருயிர் ஆகி விட்டார், சுடர்க் கோலம் - ஒளி வாய்ந்த அழகு, ஆழி அரசன் - ஆணைச் சக்கரம் ஏந்திய அரசன்.

(76 - 80) வஞ்சித் தலைவன் - சேர நாட்டின் தலைநகராகிய வஞ்சியில் வாழும் அரசனாகிய சேரன், விந்தை அழகு - வியக்கத் தக்க அழகு, இசைக்க - சொல்ல.

(81 - 85) அரண்மனை - அரசர் மாளிகை, தன்னிகரில்லாதார் - தனக்கு ஒப்பாவார் இல்லாத உயர்ந்த அழகுடையார், வேண்டேன் - விரும்ப மாட்டேன்.

(86 - 90) அடற் சிங்கம் - வலிமை வாய்ந்த சிங்கம், குழி முயல் - புதரில் வாழும் முயல், திறல் - வலிமை, பத்தினி - கற்பு

டையவள், பார்வேந்தர் - நாடாளும் அரசர், நத்தி - விரும்பி, விலைமகள் - தாசிப்பெண், பொன்னடி - பொன் போன்ற பாதம் உவமைத் தொகை.

(91 - 95) கலக்கம் - துயரம், மிஞ்சும் - பெருகும், விழிக் குறிப்பு - கட்பார்வை, பளிச்சென்று - விரைவாக, திடீரென்று

(96 - 100) காமியர் - காமவெறி கொண்டோர், நெறி ஏது- முறை என்ன உண்டு, 'காமத்திற்குக் கண்ணில்லை' என்பது பழமொழி, புத்தமுது-புதிய அமுதம் போன்றவளே: புதுமை+ அமுது - அடையடுத்த உவமையாகு பெயர், மனையாட்டி - மனைவி, அரசாணி - அரசி.

(101 - 105) துணை - வாழ்க்கைத் துணைவி, ஐயுறுதல் சந்தேகப்படுதல்.

(106 - 110) வேதநெறி-வைதிகச் சடங்கு முறை, வலக்கை தட்டி வாக்களித்தல் - வலது கையில் அடித்து சத்தியம் செய்தல், பூரிப்பு- மன மகிழ்ச்சி, வாரிப் பெருந்திரை - கடல் வெள்ளம்.

(111 - 115) திண்டோள் - திண்மை + தோள் - வலிமை வாய்ந்த தோள், இதழில் தேன் பருகல் - உதட்டில் ஊறும் எச்சிலாகிய வாயமுதம் உண்ணுதல்.

(116 - 120) ஆரத் தழுவி - இறுக அணைத்து, கோவை இதழ் - கொவ்வைக் கனி போன்று சிவந்த மெல்லிய உதடு, கூத்து - விளையாட்டு, குதூகலம் - மகிழ்ச்சி.

(121 - 125) ஆத்திரம் - ஆசை, மன்ணுக்கி விட்டாள் கெடுத்துவிட்டாள்.

(126 - 130) நிச்சயதாம்பூலம்-திருமணத்திற்கு முன் உறுதி செய்து கொள்வது; சிறுக்கி - இளம்பெண், பேதகம் - மாறுபாடான செயல், மனதில் எழுகின்ற தீ - கோபம்.

(131 - 135) தோப்பு - மரத்தொகுப்பையுடைய சோலை, ஈரிரண்டு பாய்ச்சல் - நான்கு குதி, நீரோடும் மேனி - வியர்வை சிந்தும் உடம்பு, நெருப்போடுங்கண் - கோபத் தீப் பறக்கும் கண்.

(136 - 140) எட்டி நிற்கும் செய்தி - தூரத்தில் நிற்கும் செயல், ஆர்ந்திருக்கும் செய்தி - கூடியிருக்கும் செயல்.

(141 - 145) இருவர் - மாடனும் குரங்கனும், மற்றவன் குரங்கன், தேவர் சுகம்-தேவர் உலக இன்பம் போன்ற இன்பம்.